# நாலடியார்.

குறள்வெண்பாக்களாலாகிய நூலுக்கு 'குறள்' எனப் பெயர்வந்தது போல, நாலடிவெண்பாக்களாலாகிய இந்நூலுக்கு 'நாலடி' என்று பெயர் வந்தது. 'திருக்கோவையார்,' 'திருவுந்தியார்' என்னுமிடங்களிற்போல, சிறப்புப்பற்றிய ஆர்விகுதி கூட்டப்பட்டு, நாலடியார் என்று வழங்கலாயிற்று. நாலடி என்பதற்கு - நான்காகிய அடிகளை யுடையதென்று பொருள்; பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். நீதிநூல்களுள் திருக்குறள் முதலும், இது இரண்டாவதுமாக மதிக்கப்பட்டு "நாலு மிரண்டுஞ் சொல்லுக் குறுதி" என 'திருக்குறள், நாலடியார்' என்று கூட்டி வழங்கப்படுதலால், நாலடி என்பது-நான்கு அடிகளையுடைய விருத்தம் முதலிய வேறுபாடல்களின்மேற் செல்லாமல், வெண்பாவின் மேலேயேநின்று, அவ்வெண்பாவினுள் நாலடிகளையுடையனவாய் நூல்களுட் பயின்றுவருகிற நேரிசை இன்னிசை வெண்பாக்களையே உணர்த்தி, அவற்றாலாகிய நூலுக்குக் கருவியாகுபெய ராயிற்று. இனி, வையையாற்றில் எறியப்பட்டவற்றுள் இந்நானூறுபாடல்கள் ஆற்றினின்றும் மேலே நாலடி உயரம் எழும்பினவென்றும், அதனால் இதற்கு நாலடியார் என்று பெயரிடப்பட்டதென்றுங் கூறுவாருமுளர்.

## உரைப்பாயிரம்.

இந்திரன் முதலிய தேவர்களது சுவர்க்கம் முதலிய உலகங்களையும், அளவிறந்த பேரின்பத்தையுடைய அழிவில்லாத முத்தி யுலகத்தையும் முறைமையறிந்து அடைவதற்கு உரிய மனிதர்களுக்கு உறுதியைத் தருவதென்று உயர்ந்தவர்களால் எடுக்கப்பட்ட பொருள் நான்காம்;அவை-அறம் பொருள் இன்பம் வீடு என்பன: இவற்றை-முறையே வடநூலார், தருமம் அர்த்தம் காமம் மோக்ஷம் என்னுஞ் சதுர்வித புருஷார்த்தம் என்பர். அவற்றுள், வீடென்பது-மனத்துக்கும் வாக்குக்கும் எட்டாத நிலைமையையுடையதாதலின், துறவறமாகிய காரணத்தின் வகையாற் கூறப்படுவதேயல்லாமல், இலக்கணவகையாற் கூறப்படாமையால், நூல்களாற் கூறப்படுவன அது ஒழிந்த மற்றை மூன்றுமேயாம். அவற்றுள், முதலாவது

## அறத்துப்பால்.

அறமாவது-இம்மை மறுமை வீடு என்னும் மூன்றையுந் தருவனவாய் மனு முதலிய நூல்களில் விதிக்கப்பட்டவற்றைச் செய்வதும், விலக்கப்பட்டவற்றைச் செய்யாதொழிதலு மாம்; அது - ஒழுக்கம் வழக்கு தண்டம் என்று மூன்றுவகைப்படும்: இவற்றை-முறையே வடநூலார் ஆசாரம் வியவகாரம் பிராயச்சித்தம் என்பர். அவற்றுள் ஒழுக்கமாவது - பிராமணர் முதலிய வருணத்தவர் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரியம் முதலிய ஆச்சிரமங்களில் நின்று அவ்வவற்றிற்குச் சொல்லப்பட்ட அறங்களினின்றும் வழுவாமல் ஒழுகுதலாம். வழக்காவது - ஒரு பொருளைத் தனித்தனியே எனது எனது என்றிருப்பவர்கள் அது காரணமாகத் தமக்குள் மாறுபட்டு அப்பொருளின்மேற் சொல்வது; அது-கடன்வாங்குதல், புதையல், உடையவனல்லாதவன் விற்றல், கூடிமேம்படுதல்,கொடுத்ததை மீண்டுங்கொடாமை,கூலிகொடாமை,கட்டுப்பாடுகடத்தல்,விற்றுங்கொண்டும் உள்ளமொப்பாமை, ஒப்பிப்பணிசெய்யாமை, எல்லைவழக்கு, சொற்கொடுமை, தண்டக்கொடுமை, திருடு, வன்செய்கை, மாதரைக்கவர்தல், யாதர்ஆடவர்தருமம், தாயபாகம், சூது எனப்பதினெட்டுவகையதாம். தண்டமாவது-ஒழுக்க வழக்குக்களினின்றுந் தவறினவர்களை அந்தநெறியில் நிறுத்தற்பொருட்டுப் பக்ஷபாதமில்லாமல் ஆலோசித்து அந்தந்தக் குற்றத்துக்குத் தக்கபடி சிக்ஷித்

தல். இம்மூன்றனுள், வழுக்குந் தன்டமும் உலகத்தை நல்வழிப்படுத்து வதற்கே பயன்படுவனவல்லது, ஒழுக்கம்போல மனிதரது உயிர்க்கு உறுதி தருஞ்சிறப்புடையனவல்ல வாதலாலும், அவைதாம் நூல்களிலுலேயே யன்றி அறிவுமிகுதியாலுந் தேசத்தியற்கையாலும் அறியப்படுதலாலும், அவற்றை ஒழித்து, இங்குச் சிறப்புடைய ஒழுக்கமே அறமென எடுத்துக்கொள்ளப்பட்டது. அதுதான் - நால்வகை ஆச்சிரமத்ததாய் வருணந்தோறும் வேறுபாடுடைமையால், சிறுபான்மையாகிய அச்சிறப்பியல்புகளை ஒழித்து, எல்லார்க்குமொத்திருத்தலாற் பெரும்பான்மையாகிய பொது இயல்புபற்றி, இல்லறம் துறவறம் என இருவகைத்தலையாற் கூறப்பட்டது. அவற்றுள், இரண்டாவது

## இல்லறவியல்.

இல்லறமாவது - இம்மை மறுமை ஆகிய இருமையின்பங்களையும் அனுபவித்தற்கு உரிய இல்வாழ்க்கைநிலைக்குச் சொல்லுகின்ற நெறியில் நின்று அதற்குத்துணையாகிய கற்புடைமனைவியோடுஞ் செய்யப்படுந் தருமம். துறவறம் நித்தியமாகிய முத்தியை அடைவதற்குக் காரணமாகையால் அச்சிறப்புப்பற்றி அதுமுதலில்வைக்கப்பட்டு, இவ்வில்லறம் துறவறம்போல முத்திபெறுதற்குக்காரணமாகாததனால் அச்சிறப்பின்மைபற்றி அதன்பின் வைக்கப்பட்டது. பால், இயல், அதிகாரம் என்றவற்றிற்கு - பலபொருள்கள் உள்ளனவாயினும், இங்கே, ஒருபொருளையே குறித்து வரும் பலசெய்யுட்களின் தொகுதியாகிய நூற்கூறுபாடென்று பொருள். இந்நூலில், சங்கேதத்தால், பால் என்றது - பெரும்பிரிவுக்கும், இயல் என்றது - அதற்குஉட்பட்ட சிறுபிரிவுக்கும், அதிகாரம் என்றது - அதன் உட்பிரிவுக்குமாகக் கொள்ளப்பட்டது.

## ௧௧-ம் அதிகாரம்.—பழவினை.

அதாவது - முற்பிறப்புக்களிற் செய்யப்படுதலாற் பழையனவாகிய நல்வினைதீவினைகள் தம்மைச்செய்தவர்களுக்குத் தம்பயன்களாகிய இன்பதுன்பங்களைப் பிற்பிறப்புக்களில் தவறாமல்தருமென்பதைப்பற்றிக் கூறுவது. பழவினை - ஜந்மாந்தரகர்மம். நல்வினை தீவினை - புண்ணியபாபங்கள். இக்கருமந்தான் - சஞ்சிதம், பிராரப்தம், ஆகாமியம் என மூன்றுவகைப்படும்; அவற்றுள், சஞ்சிதம் - பிறப்பு அநாதியாய் வருதலின் உயிரால் அளவில்லாமற்செய்து சேர்க்கப்பட்ட வினைகளின் பயன்கள்: பிராரப்தம் - அவற்றுள் இறந்த உடம்புகளால் அனுபவித்தனவொழியப் பிறந்த உடம்புகளால் அனுபவித்தற்கு எடுத்துக்கொள்ளப்பட்டன: ஆகாமியம் - அவையன்றிப் பின்னும் அனுபவிக்கக்கடவனவாய்க்கிடந்தன; இவையெல்லாம் அடங்குதற்கு, பொதுப்பட, 'பழவினை' என்றார். பழவினை - பண்புத்தொகை; பழமையாகிய வினையென விரியும். தானமுதலிய நல்வினைகளை முற்பிறப்புக்களிற்செய்தவர்கள் பிற்பிறப்புக்களிற் செல்வமுதலியவற்றாற் பல நன்மைகளை அனுபவிப்பரென்பதையும், அவற்றைச்செய்யாதவர் பசிபிணி முதலியவற்றாற் பலதீமைகளை அனுபவிப்பரென்பதையும் அறிவித்தற்கு, இவ்வதிகாரம் ஈகையென்னும் அதிகாரத்தின்பின் வைக்கப்பட்டது.

௧0௧. பல்லாவு ளுய்த்து விடினுங் குழக்கன்று
வல்லதாந் தாய்நாடிக் கோடலைத் - தொல்லைப்
பழவினையு மன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு.

(இ-ள்.) பல் ஆ உள் - பலபசுக்களின்நடுவில், உய்த்துவிடினும் - தான் செலுத்திவிடப்பட்டாலும், குழ கன்று - இளங்கன்றானது, தாய் நாடிக்கோடலை வல்லது ஆம் - (தனது) தாயைத் தானே தேடி அடைதலில் வல்லமையுடையதாம்; தொல்லை பழ வினையும் - மிகவும்பழமையாகிய கருமமும், தன் செய்த கிழவனை நாடிக்கொளற்கு - (பலஜீவகோடிகளுள்ளும்) தன்னைச்செய்த உரிமையுடையவனைத் தேடி அடைவதில், அன்ன தகைத்தே - அப்படிப்பட்ட தன்மையை [வல்லமையை] யுடையதேயாம்.

பல்லா - பண்புத்தொகை; பல + ஆ: பலவென்பது, தன்முன் பிறவர அகரங் கெட்டது; [நன்னூல் - உயிரீற்றுப்புணரியல் - உ௰.] 'பல்லா வொளித்து விடினும்' என்கிற பாடத்துக்கு - (தாய்ப்பசுவைப்) பலபசுக்கூட்டத்தினிடையே மறைத்துவைத்துவிட்டாலு மென்று பொருள். விடின்என்பது-இவ்வுரையில் செய்வினைப்பொருளையும், முன்னுரையில் செயப்பாட்டுவினைப்பொருளையும் உணர்த்திற்று; செயப்பாட்டுவினைப்பொருளுணர்த்தும்போது, அகரச்சாரியையும் படுவிகுதியுஞ் செய்யுள்விகாரத்தால் தொக்குநின்றனவென்று அறிக. விடின் - இன்விகுதி காலங்காட்டும் எதிர்காலவினையெச்சம். உம் - சிறப்பும்மை. குழ - இளமையுணர்த்தும் உரிச்சொல். வல்லது - பண்படியாப்பிறந்த ஒன்றன்பாற்குறிப்புமுற்று; அ-சாரியை, து - விகுதி. ஆம்-அசை; ஆகுமெனப்பொருள்கொண்டால், வல்லது - பெயராம். தாய் - இருதிணைப்பொதுப்பெயர். கோடலை, கொளற்கு-இரண்டனுருபும் நான்கனுருபும் ஏழாம்வேற்றுமையிடப்பொருளில் வந்தமையால்,உருபுமயக்கம். கோடல் - தொழிற்பெயர்; கொள் - பகுதி, தல் - விகுதி, பகுதி முதல் நீண்டது - விகாரம், ளகரங்கெட்டதும், தகரம்டகரமானதும் - சந்தி. தொல்லை - பண்புப்பெயர்; தொல் - பகுதி, ஐ-விகுதி: இப்பகுதி மைவிகுதி பெற்றுத் தொன்மையெனவும், றுவிகுதிபெற்றுத் தொன்று எனவும் வரும். தொல்லைப்பழ - ஒருபொருட்பன்மொழி; வினையினது அநாதியாய் வருந்தன்மையை வற்புறுத்தும்பொருட்டு, இவ்வாறு கூறினரென்க: இனி, தொல்லையென்பதைப் பண்பாகுபெயராக்கொண்டு, முற்பிறப்புக்களிற் செய்தலாற் பழமையாகிய வினை யென்னவுமாம். உம் - இறந்தது தழுவிய எச்சம். அன்ன - சுட்டடியாப்பிறந்த குறிப்புப்பெயரெச்சம்; அ - பகுதி, அ-விகுதி, ன் - சாரியை, மற்றொரு ன் - சந்தி. தகைத்து - குறிப்புமுற்று. ஏகாரம் - தேற்றம். தன் + செய்த = தற்செய்த; னகரம் றகரமாயிற்று: இயல்பாய்த் தன்செய்த எனவும் வரும்; [நன் - மெய்யீற்றுப்புணரியல் - கரு.] கிழவன் - உரியவனென்னும்பொருளில், கிழமை ஈறுபோன கிழ - பகுதி; பெண்பால் - கிழத்தி: வயதுமுதிர்ந்தவனென்னும்பொருளில் கிழம் - பகுதி; பெண்பால் - கிழவி. உவமையணி. (க0க)

க0௨. உருவு மிளமையு மொண்பொருளு முட்கு
மொருவழி நில்லாமை கண்டு - மொருவழி
யொன்றேயு மில்லாதான் வாழ்க்கை யுடம்பிட்டு
நின்றுவீழ்ந் தக்க துடைத்து.

(இ-ள்.) உருவும் - அழகும், இளமையும்-யௌவனமும், ஒள் பொருளும் - மேலான செல்வமும், உட்கும் - (பலரும்) அஞ்சத்தக்க மதிப்பும், ஒரு வழி - ஒரேதன்மையாக, நில்லாமை - நிலைபெற்றிராமையை, கண்டும்-பார்த்திருந்தும், ஒரு வழி - யாதாயினும் ஒருவழியால், ஒன்றேயும் - ஒரு சிறிது நல்வினையாயினும், இல்லாதான் - செய்துவைத்தலில்லாதவனது, வாழ்க்கை - உயிர்வாழ்தலானது, உடம்பு இட்டு நின்று வீழ்ம் தக்கது

உடைத்து - உடம்பை (ச்சிலகாலம்) பெற்று நின்று வீழுந்தன்மையை யுடையது; (எ - று.)

உருவமுதலியவற்றின் நிலையின்மையைக் கண்டும் நிலையான நல்வினையைச் செய்யாதவனது பிறப்பு வீணென்பது, கருத்து. எனவே, இங்ஙனம் நல்வினை செய்யவொட்டாது ஒருவனது வாழ்நாளை வீணாக்குவது பழவினையின் செயலே யென்றதாயிற்று. முதலடியில், உம்மைநான்கும் - எண்ணுப்பொருளன. உட்கு - கருவிப்பொருள் விகுதி புணர்ந்துகெட்ட பெயர்; முதனிலைத்தொழிலாகுபெய ரென்னவுமாம்: உட்குதல் - அஞ்சுதல். ஒருவழி - ஒருவனிடத்தும் எனவும், ஒருவழி ஒன்றேயும் - ஒப்பற்ற உயர்கதியைத் தரத்தக்க ஒருநற்செய்கையையும் எனவும் உரைப்பர். நில்லாமை - எதிர்மறைத்தொழிற்பெயர். கண்டும், உம் - உயர்வுசிறப்பு. ஒன்றேயும், ஏ - இசைநிறை; உம்மை - இழிவுசிறப்பு. இல்லாதான் - எதிர்மறை வினையாலணையும் பெயர்; ஆ - சாரியை: எதிர்மறையிடைநிலையன்று; இல் என்னும் பகுதியே எதிர்மறைப்பொருள் குறித்துநின்றதனால்: து - சாரியை உகரங்கெட்டுநின்றது என்றாயினும், த்எழுத்துப்பேறுஎன்றாயினுங் கொள்க. வாழ்க்கை - தொழிற்பெயர். நின்று - அசை. வீழும் என்னும் எதிர்காலப்பெயரெச்சம், ஈற்றுயிர்கெட்டு 'வீழ்ம்' என நின்றது. தக்கது என்பது - தகை தகுதி என்பனபோல, குணத்தைபுணர்த்துந் தொழிற்பெயர். உடைத்து - பண்படியாப்பிறந்து அகரச்சாரியைபெறாதுவந்தகுறிப்புமுற்று; சாரியைபெற்றால், உடையது எனவரும்: இது - வினையெச்சமாக வருமிடத்து, உடையச்செய்து என்கிறபொருளைத் தரும். (௧0௨)

௧0௩. வளம்பட வேண்டாதார் யார்யாரு மில்லை
யளந்தன போக மவரவ ராற்றான்
விளங்காய் திரட்டினா ரில்லைக் களங்கனியைக்
காரெனச் செய்தாரு மில்.

(இ - ள்.) வளம் பட வேண்டாதார் - (செல்வமுதலியவற்றாற்) சிறப்பைப் பெற விரும்பாதவர், யார் - (உலகத்தில்) யாவர் உளர்? யாரும் இல்லை—; (ஆயினும்), போகம் - (அவரவரது) சுகஅநுபவங்கள், அவர் அவர் ஆற்றான் அளந்தன - அவரவர்களது ஊழ்வினையால் (முன்னமே) அளவு செய்யப்பட்டுள்ளன; விள காய் திரட்டினார் இல்லை - விளங்காயைத் திரண்டஉருவினதாகச்செய்துவைத்தவரில்லை; களா கனியை கார் என செய்தாரும் இல் - களாப்பழத்தைக் கரியஉருவினதாகச்செய்துவைத்தவரும் இல்லை.

விளங்காய்முதலியன தந்தம்இயற்கையால் அமைந்திருப்பதுபோல அவரவர்சுகமும் அவரவரது புண்ணிய இயற்கையால் அமைந்த தென்பதாம். எடுத்துக்காட்டுவமையணி; உபமானஉபமேயங்களின் இடையே உவமவுருபுகொடாமற் கூறினமையால்: இதனை வடநூலார் திருஷ்டாந்தாலங்காரமென்பர். யார்யாரும் என எடுத்து, எப்படிப்பட்டவரும் என்றும் உரைப்பர். யார் - வினாவடியாப்பிறந்த பலர்பாற்பெயர். உம்மை - முற்று. அளந்தன - செயப்பாட்டுவினைப்பொருளில் வந்த செய்வினை. விளங்காய், களங்கனி - மரப்பெயர் முன்னர் இனமென்மை தோன்றிற்று; [நன் - உயிரீறு - ௬௬.] கருமையென்னும் பண்புப்பெயர், ஈறுபோய் ஆதிநீண்டு நடு நின்றஉகரமுங் கெட்டு 'கார்' என நின்றது; [நன் - பதவியல் - ௬.] திரட்டினார், திரள்என்பதன் பிறவினையாகிய திரட்டு - பகுதி. செய்தாரும், உம் - இறந்தது தழுவிய எச்சம். இல் - இல்லையென்பதன் விகாரம். (௧0௩)

கoச. உறற்பால நீக்க லுறுவர்க்கு மாகா
பெறற்பா லனையவு மன்னவா மாரி
வறப்பிற் றருவாரு மில்லை யதனைச்
சிறப்பிற் றணிப்பாரு மில்.

(இ - ள்.) உறற்பால-(ஊழ்வினையால்) நேரிடத்தக்க துன்பங்கள், உறுவர்க்கும்-ஆற்றல் மிகுந்த முனிவர்களுக்கும், நீக்கல் ஆகா-விலக்கக்கூடாதனவாம்; பெறல் பால அனையவும் - பெறத்தக்க தன்மையையுடைய அவ்வின்பங்களும், அன்ன ஆம் - அப்படிப்பட்டனவாகும் [நீக்கலாகாதனவாம்]; (எவைபோலவெனின்), மாரி வறப்பின் - மழை பெய்யாதாயின், தருவாரும் - (அதனைப்) பெய்துதருவிக்கவல்லவரும், இல்லை—; சிறப்பின் - (அம்மழை) மிகுதியாகப்பெய்தால், அதனை—, தணிப்பாரும் - குறையச்செய்பவர்களும், இல் - இல்லை; (எ - று.)

இதுவும், எடுத்துக்காட்டுவமையணி. எல்லாம் பழவினையின்படியே நடக்குமென்பது, கருத்து. பால-பான்மையென்னும் பண்புப்பெயரின் அடியாகப்பிறந்த பலவின்பால் வினையாலணையும் பெயர். வறப்பின், சிறப்பின்-எதிர்காலவினையெச்சங்கள்; வற, சிற - பகுதிகள், ப் - சந்தி, ப் - எழுத்துப்பேறு, இன் - காலங்காட்டும் விகுதி: இனி, வறப்பு, சிறப்பு என்னுந் தொழிற்பெயர்களின் ஏழாம்வேற்றுமையெனவுமாம். அனைய - அனை; அ - பகுதி, ன், ஐ - சாரியைகள், ய் - சந்தி, அ-பலவின்பாற்பெயர்விகுதி. (கoச)

கoரு. தினைத்துணைய ராகித்தந் தேசுள் ளடக்கிப்
பனைத்துணையார் வைகலும் பாடழிந்து வாழ்வர்
நினைப்பக் கிடந்த தெவனுண்டா மேலை
வினைப்பய னல்லாற் பிற.

(இ - ள்.) பனை துணையார் - பனையளவு பெரியவர்கள், வைகலும் - நாள்தோறும், பாடு அழிந்து - (தமது) பெருமை கெட்டு, தினை துணையர் ஆகி-தினையளவு சிறியவர்களாய், தம் தேசு உள் அடக்கி-தமது ஒளியை உள்ளே அடக்கிக்கொண்டு, வாழ்வர் - உயிர்வாழ்வார்கள்; (இதற்குக்காரணம்), நினைப்ப - யோசித்தால், மேலை வினை பயன் அல்லால் - முற்பிறப்பிற்செய்த தீவினையின் பயனேயல்லாமல், பிற-வேறாக, கிடந்தது - பொருந்தியது, எவன் உண்டு ஆம் - யாது உள்ளதாம்? [எதுவுமில்லை யென்றபடி].

செல்வம் அதிகாரம் கல்வி முதலியவற்றால் உயர்ந்தவர்களிற்பலர் விரைவிலே அவ்வுயர்ச்சியொழிந்து தாழ்வையடைந்து ஒளிகுன்றி இரத்தல்முதலியனசெய்து வாழ்தற்குக் காரணம் பழவினையே யென்பது கருத்து. தினை, பனை என்பன - சிறுமைபெருமைகட்கும் தாழ்வுஉயர்வுகளுக்கும் எடுத்துக்காட்டப்படுகிற சிலஅளவுகள். வைகலும் - நாளடைவிலே யென்றுமாம். எவன் - அஃறிணைப்பெயர். மேலை, ஐ - சாரியை. (கoரு)

கoசு. பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் வீயவும்
கல்லாதார் வாழ்வ தறிதிரேற்—கல்லாதார்
சேதன மென்னுமச் சேறகத் தின்மையாற்
கோதென்று கொள்ளாதாங் கூற்று.

(இ - ள்.) பல் - பலவகைப்பட்ட, ஆன்ற - சிறந்த, கேள்வி - நூற்கேள்விகளினால், பயன் - (உயிர்வாழ்க்கையின்) பயனை, உணர்வார் - அறிபவராகிய கற்றோர்கள், வீயவும் - (பலர் விரைவிலே) இறக்கவும், கல்லாதார்-

படியாதவர்கள், வாழ்வது - (பலகாலம்) உயிர்வாழ்வதைப்பற்றி, அறிதிரேல் - (காரணமென்னவென்று) ஆலோசித்தறிவீராகில், கல்லாதார் - படியாதவர்கள், சேதனம் என்னும் அ சேறு அகத்து இன்மையால் - அறிவென்கிற அந்தச்சாரத்தைத் தமது உள்ளே உடைத்தாகாமையால், (அவர்களை), கூற்று - யமன், கோது என்று-அசாரமென்றுநினைத்து, கொள்ளாது- எடுத்துக்கொள்ளான் ; (எ - று.)

சாரத்தை விரைவிலே கிரகித்துக்கொண்டு அசாரத்தை விட்டிடுதல் எவர்க்கும் இயல்பாதலால் யமனும் கல்வியுடையோரை இளமையிலேயே எடுத்துக்கொண்டு அஃதில்லாரை விட்டிடுவானென்று கருத்து. ஆன்ற, சால் என்பதன் மரூஉவாகிய ஆல் - பகுதி. ஏல் - என்னில் என்பதன் மரூஉ. சேறு - ஸாரம் என்னும் வடமொழித்திரிபு ; "சேறு படுமலர் சிந்த விரைந்தே" எனச் சிந்தாமணியிலும், ஸ்ரீஸாரக்ஷேத்திரத்தைத் திருச்சேறையென வழங்குமிடத்தும் காண்க. கூற்று - உடம்பையும் உயிரையும் வேறுவேறாகக் கூறுசெய்பவன் ; அல்லது, பொதுப்படச்செல்லுங்காலத்தைப்பிராணிகளுக்கேற்பக் கூறுபடுத்துபவன். தேவர்களை உயர்திணையாகவும் அஃறிணையாகவுஞ் சொல்லலாமாதலால், 'கூற்றுக் கொள்ளாது' எனப்பட்டது. படித்தவர் விரைவிலிறத்தலும் படியாதவர் நெடுநாளிருத்தலு மாகிய மாறுபாட்டிற்கும், சிலர் அறிவுடையராயிருத்தலுஞ் சிலர் அறிவிலராயிருத்தலு மாகிய வேறுபாட்டிற்குங் காரணம் சன்மாந்தரகருமமே யென்பது தாற்பரியம். "பாபீ சிராயுஸ் ஸுக்ருதீ கதாயு:" என்பதுங் காண்க. தற்குறிப்பேற்றவணி ; வடநூலார் 'உத்ப்ரேக்ஷாலங்காரம்" என்பர். ஆம் - அசை.

க0எ. இடும்பைகூர் நெஞ்சத்தா ரெல்லாருங் காண
நெடுங்கடை நின்றுழல்வ தெல்லா—மடம்பம்பூ,
வன்னங் கிழிக்கு மலைகடற் றண்சேர்ப்ப
முன்னை வினையாய் விடும்.

(இ - ள்.) அடம்பம் பூ - அடம்பங்கொடியின் பூக்களை, அன்னம் - அன்னப்பறவைகள், கிழிக்கும்-(மூக்காற்கொத்திக்) கிழித்து விளையாடுதற்கிடமான, அலை கடல் தண் சேர்ப்ப-அலைகின்ற கடலினது குளிர்ந்த துறையையுடைய பாண்டியனே!(உலகத்தில் சிலர்), எல்லாரும்-யாவரும், காண-(தம்மைப்) பார்க்கும்படி, இடும்பை கூர் நெஞ்சத்தார் - வறுமைத்துன்பம் மிகுந்த மனமுடையவர்களாய், நெடு கடை - பெரிய பலவீட்டு வாயில்களில், நின்று - போய்நின்று, உழல்வது எல்லாம் - (பிச்சைக்காக) வருந்துஞ்செய்கையெல்லாம், முன்னை வினை ஆய்விடும் - முற்பிறப்பிற்செய்த தீவினையின் பயனேயாம் ; (எ - று.)

இனி, முதலடிக்கு - மிகஇரக்கம்பொருந்திய மனத்தையுடையவர்களாய்த் தம்மை யாவருங் காணும்படி யென்றும் உரைக்கலாம். கூர் - உரிச்சொல். நெடுங்கடை - வெகுகாலம் என்று உரைப்பாருமுளர். உழல்வதெல்லாம் - ஒருமைப்பன்மைமயக்கம். மூன்றாமடி - அந்நாட்டின் நீர்வளத்தையும், நெய்தனிலச்சிறப்பையும் விளக்கிற்று. அடம்பு - கொடியின்பெயர். அம் - சாரியை. முன்னை, ஐ - சாரியை. ஆய்விடும், விடு - துணிவுப்பொருளை உணர்த்திற்று. அன்னம் - ஹம்ஸம். (க0எ)

க0அ. அறியாரு மல்ல ரறிவ தறிந்தும்
பழியோடு பட்டவை செய்தல்—வளியோடி
நெய்த னறவுயிர்க்கு நீள்கடற் றண்சேர்ப்ப
செய்த வினையான் வரும்.

(இ - ள்.) வளி ஓடி - காற்று வீசுதலினால், நெய்தல் - நெய்தற்பூக்கள், நறவு உயிர்க்கும் - (அசைந்து) தேனைச் சொரிகின்ற, நீள் கடல் தண் சேர்ப்ப - பெரிய கடலினது குளிர்ந்த கரையையுடைய பாண்டியனே! (சிலர்), அறியாரும் அல்லர் - அறியாதவர்களு மல்லர்கள், அறிவது அறிந்தும் - அறிவதற்குரியவற்றை அறிந்திருந்தும், பழியோடு பட்டவை செய்தல் - உலகநிந்தையோடு பொருந்திய தீயதொழில்களைச் செய்தல், செய்த வினையான் வரும்-(முற்பிறப்பிற்) செய்த தீவினையால் உண்டாகும்; (எ-று.)

அறிந்தும் பழிப்பனசெய்தல் பழவினைப்பயனே யென்று கருத்து. வளி ஓடி நெய்தல் நறவு உயிர்க்கும் - காற்றுத் தான் விரைந்துசென்று நெய்தல் மலரினது வாசனையை வீசுகிற எனவுமாம். நெய்தல் - நீர்ப்பூங்கொடிகளு ளொன்று. அறிவது - சாதியொருமை. (க0அ)

க0கூ. ஈண்டுநீர் வையத்து ளெல்லாரு மெத்துணையும்
வேண்டார்மற் றீய விழைபய னல்லவை
வேண்டினும் வேண்டா விடினு முறற்பால
தீண்டா விடுத லரிது.

(இ - ள்.) ஈண்டு நீர் வையத்துள் - நெருங்கிய கடலாற் சூழப்பட்ட நிலவுலகத்தில், எல்லாரும் - யாவரும், எத்துணையும் - மிகச்சிறிதும், தீய - கொடியனவாகிய துன்பங்களை, வேண்டார் - (பெற) விரும்பார்; விழை பயன்-(யாவரும்) விரும்பும் பயன், நல்லவை-நல்லனவாகிய இன்பங்களே யாகும்; (ஒருவர்), வேண்டினும்-விரும்பினாலும், வேண்டாவிடினும்-வேண்டாவிட்டாலும், உறற்பால - (பழவினையால்) வந்துஅடைதற்குரியனவாகிய இன்பங்களும் துன்பங்களும், தீண்டா விடுதல் - (அவரை) அடையாமல் விடுவது, அரிது - இல்லை; (எ - று.)

ஈண்டுநீர்-வினைத்தொகை. நீர்-கடலுக்கு ஆகுபெயர். இனி, ஈண்டுநீர் - வினைத்தொகையன்மொழியாகவுமாம். 'எட்டுணையும்' என்றும் பாடம். மன்-அசை. தீய, உறற்பால - பெயர்கள். விழைபயன் அல்லவை எனப் பிரித்து - விரும்பப்படும்பயனல்லாதனவாகிய தீயனவற்றை என்றும் உரைக்கலாம் "தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்,மனக்கவலை மாற்ற லரிது" என்பதிற்போல, இங்கு அருமை இன்மையின்மேல்நின்றது.

கக0. சிறுகா பெருகா முறைபிறழ்ந்து வாரா
வுறுகாலத் தூற்றாகா வாமிடத்தே யாகுஞ்
சிறுகாலைப் பட்ட பொறியு மதனா
லிறுகாலத் தென்னை பரிவு.

(இ - ள்.) சிறு காலை - உயிர்உடம்பையடையுங் காலத்தில்தானே, பட்ட - (அனுபவிக்கவேண்டுமென்று) நியமிக்கப்பட்ட, பொறியும் - ஊழ்வினைகளெல்லாம், சிறுகா - குறையமாட்டா; பெருகா - வளரமாட்டா; முறை பிறழ்ந்து வாரா-(முற்பிறப்பிற்செய்யப்பட்ட) முறைமைதவறி முன்பின்னாகவரமாட்டா; உறு காலத்து ஊற்று ஆகா - (துன்பம்) வருங்காலத்து ஊன்றுகோல்போல்உதவி அத்துன்பத்தைஒழிக்கமாட்டா; ஆம் இடத்தே ஆகும் - வரவேண்டியகாலத்திலேயே வரும்; அதனால் - ஆதலால், இறு காலத்து - (தீவினைப்பயனாற்) கெடுதியடையுங்காலத்தில், பரிவு-இரங்குவது, என்னை - ஏன்? (எ - று.)

அனுபவித்தேதீரவேண்டுவதாகிய விதியின் பயனைக்குறித்துத் துக்கிப்பது வீண் என்பது கருத்து. "வருந்தி யழைத்தாலும் வாராத வாரா, பொ

ருந்துவன போமினென்றாற் போகா—விருந்தேங்கி, நெஞ்சம்புண் ணாக நெடுந்தூரந் தானினைந்து, அஞ்சுவதே மாந்தர் தொழில்'' என ஔவையார் கூறியதும் அறிக. (கக0)

## க௨-ம் அதி.—மெய்ம்மை.

அதாவது - உண்மையை உணர்த்துவது. இங்கே, உண்மையென்றது-அந்தந்தப்பொருள்களின் இயற்கையானதன்மை. இது, ஊழ்வினையால் அமைவதாதலின், பழவினையின்பின் வைக்கப்பட்டது.

கக௧. இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும்
வசையன்று வையத் தியற்கை - நசையழுங்க
நின்றோடிப் பொய்த்த னிரைதொடீஇ செய்ந்நன்றி
கொன்றாரிற் குற்ற முடைத்து.

(இ - ள்.) நிரை தொடீஇ-ஒழுங்காகிய வளையல்களை யுடையவளே! இசையா ஒரு பொருள் இல் என்றல் - (தம்மாற்கொடுப்பதற்குக்) கூடாத தொருபொருளை(யாசகர்க்கு)இல்லையென்று (இரந்தஅப்பொழுதே) சொல்லுதல், யார்க்கும் வசை அன்று - எவர்க்கும் பழிப்பாகாது; வையத்து இயற்கை - உலகத்தாரின் இயல்பாம்; நின்று - (கொடுப்பனென்பதுதோன்ற) நின்று, ஓடி - நெடுங்காலங்கழித்துச்சென்று, (பின்பு), நசை அழுங்க - (இரப்பவரது) ஆசை கெடும்படி, பொய்த்தல் - (இல்லையென்றுசொல்லிப்) பொய்யுரைதல், செய் நன்றி கொன்றாரின் குற்றம் உடைத்து - (தமக்குப் பிறர்) செய்த உபகாரத்தை மறந்தவரது குற்றத்தினும் (அதிகமான) குற்றத்தையுடையது; (எ - று.)

உலகத்தில் யோக்கியர்கள் தம்மாற்கொடுத்தற்கு இசையாதபொருளை ஒருவர் யாசித்தால் அப்பொழுதே இல்லையென்றுசொல்லி அனுப்பிவிடுவர்; அது குற்றமன்று; அயோக்கியர்களோ யாசகருக்குத் தாங்கள்கொடுப்பதாக நெடுங்காலம் ஆசைகாட்டிக் கடைசியில் இல்லையென்று பொய்யராவர்; அது எல்லாக்குற்றங்களினும் பெரியதொருகுற்றமா மென்பது கருத்து. இதனால் யோக்கிய அயோக்கியர்களது இயற்கை சொல்லப்பட்டது. நிரைதொடி - வினைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை; ஈறுநீண்டு அளபெடுத்தது - விளியுருபு: இது, மகடூஉ முன்னிலை; முன்னர் வந்தன, ஆடூஉ முன்னிலையாம். "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்னுந் திருக்குறளினால், செய்ந்நன்றிமறத்தல் பிராயச்சித்தமில்லாததொரு பாதகமாதலை உணர்க. இனி, நின்று - (யாசகன் நெடுங்காலங் காத்து) நின்று, நசை அழுங்க-(பின்) ஆசைகெடும்படி, ஓடி பொய்த்தல் - (கொடுப்பதற்கு இசைந்தபொருளைக் கொடாமல்) ஓடி ஒளித்தல் எனவும் பொருள் கொள்ளலாம். (ககக)

கக௨. தக்காருந் தக்கவ ரல்லாருந் தந்நீர்மை
யெக்காலுங் குன்ற லிலராவர் - அக்காரம்
யாவரே தின்னினுங் கையாதாங் கைக்குமாந்
தேவரே தின்னினும் வேம்பு.

(இ - ள்.) தக்காரும்-தகுதியையுடைய யோக்கியரும், தக்கவர் அல்லாரும் - தகுதியையுடையவர்களல்லாத அயோக்கியரும், எக்காலும் - எப்பொழுதும் [பெரியர்வந்தபொழுதும் சிறியர்வந்தபொழுதும்], தம் நீர்மை குன்றல் இலர் ஆவர் - தங்களது இயல்பானகுணங் குறைதலில்லாத

வராவர் ; (எதுபோல எனின்), அக்காரம் - கருப்பஞ்சாற்றுக்கட்டி, யாவரே தின்னினும் கையாது - எவர்தின்றாலுங் கசவாது ; வேம்பு - வேப்பங்காய், தேவரே தின்னினும் - தேவர்களே தின்றாலும், கைக்கும்-கசக்கும்;

எடுத்துக்காட்டுவமையணி. தக்கார்சீர்மை - உத்தமகுணம் ; வாய்மை முதலியன. தக்கவரல்லார்சீர்மை - அதமகுணம் ; பொய்ம்மைமுதலியன. அக்காரம் - இக்ஷுஸாரம்என்னும்வடமொழியின் திரிபுபோலும் ; இது - இங்கே வெல்லம், சர்க்கரை, கற்கண்டு முதலியவற்றைக் குறித்தது. உகாரங்கள் - முறையே இழிவுசிறப்பும் உயர்வுசிறப்பும் உணர்த்தும். (௧௧௨)

௧௧௩. காலாடு போழ்திற் கழிகிளைஞர் வானத்து
மேலாடு மீனிற் பலராவ - ரேலா
விடரொருவ ருற்றக்கா லீர்ங்குன்ற நாட
தொடர்புடையே மென்பார் சிலர்.

(இ - ள்.) ஈர் குன்றம் நாட - குளிர்ந்த மலையையுடைய நாட்டையுடையவனே! கால் ஆடு போழ்தில் - (ஒருவர்க்குச்) செல்வம்வந்தகாலத்தில், வானத்து மேல் ஆடும் மீனின் பலர் - ஆகாயத்தின்மேற் சஞ்சரிக்கின்ற நக்ஷத்திரங்களினும் அனேகர், கழி கிளைஞர் ஆவர் - (அவருக்கு) மிக்க உறவினராவர் ; ஒருவர் ஏலா இடர் உற்றக்கால் - அவ்வொருவரே தகாததுன்பத்தை அடையுங்காலத்து, தொடர்பு உடையேம் என்பார்-(அவருக்கு யாம்) உறவினரென்றுசொல்லி முன்வந்து உதவுபவர், சிலர்-சிலரே;

செல்வமுள்ளகாலத்துப் பலர்வந்தசூழ்ந்து பொய்யுறவுபாராட்டி நடித்தலும் வறுமைவந்தகாலத்துச் சிலர்மாத்திரமே மெய்யுறவினராகவந்து உதவுதலு மாகிய உலகஇயற்கை இதனாற் சொல்லப்பட்டது. "அற்ற குளத்தி லறுநீர்ப் பறவைபோ, லுற்றுழித் தீர்வா ருறவல்ல—ரக்குளத்திற், கொட்டியு மாம்பலு நெய்தலும் போலவே, யொட்டி யுறுவா ருறவு" என்பது காண்க. கால் ஆடுதல் - பாதம்நிலைத்தஇடம்போதல் ; இது - இலக்கணையால், செல்வம்பெறுதலை உணர்த்திற்று : கைசாய்தல், சாய்கால், செல்வாக்கு என்பனபோலக் கொள்க. போழ்து - மரூஉமொழி. கழி - உரிச்சொல் ; இனி, இழிவான உறவின ரென்றும் பொருள்கொள்ளலாம். உற்றக்கால் - கால்என்னும்விகுதிபெற்ற எதிர்காலவினையெச்சம்; உற்ற கால் எனப்பிரித்துப் பெயரெச்சத்தொடராகக்கொள்ளலாகாது : வருமொழிமுதல்வலி மிக்கதனால். ஈர் + குன்றம்=ஈர்ங்குன்றம் ; பண்புத்தொகை: இனமெல்லெழுத்துமிக்கது ; [நன் - மெய் - ௨௧.] ஈர் என்ற அடைமொழி, பலநீரருவிகளையுடைமையாகிய குன்றத்தினது வளத்தைத் தெரிவித்தது. சிலர் என்றது, அருமைகுறித்துநின்றது. (௧௧௩)

௧௧௪. வடுவிலா வையத்து மன்னிய மூன்றி
னடுவண தெய்த விருதலையு மெய்து
நடுவண தெய்தாதா னெய்து முலைப்பெய்
தடுவது போலுந் துயர்.

(இ - ள்.) வடு இலா - குற்றமில்லாத, வையத்து-இவ்வுலகத்திலே, மன்னிய - பொருந்திய, மூன்றில்- (அறம் பொருள் இன்பம் என்னும்) மூன்றனுள்ளே, நடுவணது-நடுவிற்சொல்லப்பட்ட பொருளை, எய்த - (ஒருவன்) அடைய, (அதனால்), இரு தலையும் - முன்னும்பின்னுமுள்ள அறத்தையும் இன்பத்தையும், எய்தும் - அடைவான்; நடுவணது எய்தாதான் - இடையில்நின்ற அச்செல்வத்தை அடையாதவன், உலை பெய்து அடுவது போலும்

துயர் - (கொல்லனது) உலைக்களத்திலே இட்டுக் காய்ச்சப்படுவதனாலாகுந் துன்பத்தைப் போன்ற துன்பத்தை, எய்தும் - அடைவான் ; (எ - று.)

இதனால்,செல்வவறுமைகளின் இயற்கை கூறப்பட்டது. செல்வத்தைப் பெற்றால் தானதருமங்களைச்செய்யவும் இம்மையின்பங்களை அனுபவிக்கவுங் கூடும் ; அதனைப் பெறாவிட்டால் இரத்தல்முதலியவற்றால் மிகுந்ததுன்பத்தை அடைவான் என்பதாம். மூன்று - எண்ணளவையாகுபெயர் ; தொகைக் குறிப்பு. (௧௧௪)

௧௧௫. நல்லாவின் கன்றாயி னாகும் விலைபெறூஉங்
கல்லாரே யாயினுஞ் செல்வர்வாய்ச் சொற்செல்லும்
புல்லீரப் போழ்தி னுழவேபோன் மீதாடிச்
செல்லாவா நல்கூர்ந்தார் சொல்.

(இ - ள்.) நல் ஆவின் கன்று ஆயின்—உயர்ந்தசாதிப் பசுவினது கன்றாயிருக்குமானால், நாகும் - இளங்கன்றும், விலை பெறூஉம் - (மிக்க) விலையை அடையும் ; (அதுபோல), கல்லாரே ஆயினும்-படியாதவர்களேயானாலும், செல்வர் வாய் சொல் - பொருளுடையோரது வாக்கிலிருந்துவருஞ் சொற்கள், செல்லும் - (பலராலும்) அங்கீகரிக்கப்படும் ; நல்கூர்ந்தார் சொல் - (படித்தவர்களாயினும்) வறுமைப்பட்டவரது சொற்கள், புல் ஈரம் போழ்தின் உழவே போல் - அற்பமான ஈரத்தையுடைய காலத்தில் (நிலத்தில்) உழுதல்போல, மீதாடி - மேலேமாத்திரந்தோன்றி, செல்லா ஆம் - உள்ளே ஏற்றுக்கொள்ளப்படாதனவாம் ; (எ - று.)

எடுத்துக்காட்டுவமையணியும் முற்றுவமையணியுஞ் சேர்ந்துவந்த சேர்வையணி. நாகு - இளமையையும் பெண்மையையும் உணர்த்தும் பெயர் ; "எருமையு மரையும் பெற்றமு நாகே" என்னுந் தொல்காப்பியச்சூத்திரத்தால், இது பசுவிற்கு உரியதாதலை உணர்க. விலைபெறூஉம் - இன்னிசைநிறைத்தற்பொருட்டுக்குறில்நீண்டுஅளபெடுத்தது. நல்கு ஊர் என்னும் இரண்டுசொற்கள் ஒருசொல்லின்தன்மைப்பட்டு நல்கூர் என நின்றது; நல்கூர்தல் - பிறர்கொடுத்ததைப் பெற்றுக்கொண்டு செல்லுதல்: எனவே, வறுமையாயிற்று ; நல்குதல் - கொடுத்தல், ஊர்தல் - செல்லுதல். 'வாய்ச் சொல்' என்றவிடத்து'வாய்' என வேண்டாதுகூறியது,அதன்சிறப்பை உணர்த்தற்கு. உழவு - தொழிற்பெயர். இதனால், செல்வத்தின் சிறப்பான இயற்கை கூறப்பட்டது. (௧௧௫)

௧௧௬. இடம்பட மெய்ஞ்ஞானங் கற்பினு மென்று
மடங்காதா ரென்று மடங்கார் - தடங்கண்ணா
யுப்பொடு நெய்பா றயிர்காயம் பெய்தடினுங்
கைப்பறாப் பேய்ச்சுரையின் காய்.

(இ-ள்.) தட கண்ணாய்-பெரிய கண்களையுடையவளே! அடங்காதார்-(இயல்பாக) அடங்குந்தன்மையில்லாதவர்கள், மெய் ஞானம் - தத்துவஞானத்தை உணர்த்தும் நூல்களை, இடம்பட-அதிகமாக, என்றும் - எப்பொழுதும், கற்பினும் - படித்துவந்தாலும், என்றும் அடங்கார் - எப்பொழுதும் அடங்கமாட்டார்கள் ; (எதுபோல எனின்), உப்பொடு - உப்பையும், நெய் - நெய்யையும், பால் - பாலையும், தயிர் - தயிரையும், காயம் - பெருங்காயத்தையும், பெய்து - தனித்தனியே சேர்த்து, அடினும்-சமைக்கப்பட்டாலும், பேய்ச் சுரையின் காய் - பேய்ச்சுரைக்காய்கள், கைப்பு அறா - (தமது இயற்கையாகிய) கசப்பு நீங்காவாம் ; (எ - று.)

எடுத்துக்காட்டுவமையணி. இதனால், அடங்காதவரது தன்மை கூறப்பட்டது. ஞானம் - நூலுக்குக் காரியவாகுபெயர். தட - உரிச்சொல்; தடங்கண் - உரிச்சொற்புணர்ச்சியாதலால், இனமெலிமிக்கது; [நன் - மெய் - ௩௬.] கண்ணாய் - கண்ணாளென்பதன்விளி: மகரவீறு முன்னிலை; ஈறு திரிந்தது - விளியுருபு. 'உப்பொடு' என உப்பை ஒடுக்கொடுத்துப் பிரித்தது, அறுசுவையுள்ளுந் தலைமைபெறுதலாகிய அதன்சிறப்புத் தோன்ற. காய்-காய்ப்பது. (௧௧௬)

௧௧௭. தம்மை யிகழ்வாரைத் தாமவரின் முன்னிகழ்க
வென்னை யவரோடு பட்டது - புன்னை
விறற்பூங் கமழ்கானல் வீங்குநீர்ச் சேர்ப்ப
வுறற்பால யார்க்கு முறும்.

(இ - ள்.) புன்னை - புன்னைமரங்களின், விறல் - பெருமையையுடைய, பூ - மலர்கள், கமழ் - வாசனைவீசுகிற, கானல் - சோலையையுடைய, வீங்கு நீர் - மிக்க நீரையுடைய கடலினது, சேர்ப்ப - துறையையுடையவனே! தம்மை இகழ்வாரை - (காரணமின்றித்) தம்மை நிந்திப்பவர்களை, தாம் அவரின் முன் இகழ்க - தாம் அவர் நிந்திப்பதற்குமுன்னே [உடனேயென்றபடி] நிந்திக்கக்கடவர்; அவரோடு பட்டது என்னை - (தம்மைநிந்திக்கிற) அவர்களோடு தமக்கு உண்டான தாட்சிணியம் என்ன? உறற்பால - வரத்தக்கனவாகிய இன்பதுன்பங்கள், யார்க்கும் - எவர்க்கும், உறும் - (தவறாமல்) வந்தேதீரும்; (எ - று.)

இங்ஙனங்கூறியது, காரணமின்றிப் பிறரைப்பழிப்பவர்களது நிந்தையைக் குறைவுபடுத்தற்கு உபாயமென்னுங் கருத்தால். அவரின்முன் என்பதற்கு - அவரது புறத்திலேயன்றி எதிரிலே என்றும் பொருள்கொள்ளலாம். விறல் என்றது - கடலுக்குஇயற்கையாயுள்ள துர்க்கந்தத்தையும் போக்குந் திறத்தை. "பூப்பெயர் முன்இன மென்மையுந் தோன்றும்" எனப் பொதுப்படக்கூறியதனால், அல்வழிஎழுவாய்த்தொடரில் மெலிமிக்கது. கானல் - கடற்கரைச்சோலை. வீங்குநீர் - வினைத்தொகையன்மொழி. இதனால், கீழ்மக்களது தன்மையும் அவரைஅடக்கும்உபாயமுங் கூறப்பட்டன. (௧௧௭)

௧௧௮. ஆவே றுருவின வாயினு மாபயந்த
பால்வே றுருவின வல்லவாம் - பால்போ
லொருதன்மைத் தாகு மறநெறி யாபோ
லுருவு பலகொள லீங்கு.

(இ - ள்.) ஆ வேறு உருவின ஆயினும் - பசுக்கள் வெவ்வேறுநிறத்தையுடையனவாயிருந்தாலும், ஆ பயந்த பால் - அப்பசுக்கள் தந்த பால்கள், வேறு உருவின அல்ல ஆம் - (வெண்ணிறத்தையேயன்றி) வெவ்வேறானநிறத்தை யுடையவையாகமாட்டா; பால் போல் - அந்தப்பால்போல, அறம் - தருமமானது, ஒரு தன்மைத்து ஆகும் - ஒரே தன்மையுடையதாம்; நெறி - (அத்தருமத்தின்) வழிகள், ஈங்கு - இவ்வுலகத்தில், உருவு பல கொளல் - பல ரூபங்களைக் கொண்டிருத்தல், ஆபோல் - அப்பசுக்கள்போல, (ஆகும்); (எ - று.)

என்றது - தானம், தவம், விரதம், வழிபடுகடவுள்வணக்கம் முதலாகத் தருமஞ்செய்யும்வழி பலவாதலை நோக்கி யென்க. இதனால், அறத்தினது தன்மை சொல்லப்பட்டது. "உருவே யட்டையும் வடிவு நிறமும்" என்பதனால், 'உரு' என்பது நிறத்தையும் வடிவையும் உணர்த்துமாறு அறிக.

தெரு - தெருவு, நடு - நடுவு என்பனபோல உரு- உருவு என உகரச்சாரியை பெற்றது. ஆஎன்னுஞ்சொல்இரண்டனுள், பின்னது - சுட்டுப்பெயர்மாத்திரையாய்நின்றது. ஈங்கு - சுட்டுநீண்டது. (ககஅ)

ககூ. யாஅ ருலகத்தோர் சொல்லில்லார் தேருங்கால்
யாஅ ருபாயத்தின் வாழாதார் - யாஅ
ரிடையாக வின்னாத தெய்தாதார் யாஅர்
கடைபோகச் செல்வமுய்த் தார்.

(இ - ள்.) தேரும் கால் - ஆராயுமிடத்து, உலகத்து - உலகத்தில், ஓர் சொல் இல்லார் - ஒருநிந்தைச்சொல்லை யுடைத்தாகாதவர், யாஅர் - எவர்? [எவருமில ரென்றபடி]; உபாயத்தின் வாழாதார் - தந்திரத்தால் வாழாதவர்கள், யாஅர்-எவர்? இடை ஆக - (தமது ஆயுளின்) இடையிலே, இன்னாதது எய்தாதார் - துன்பத்தைஅடையாதவர், யாஅர்—? கடை போக - வாழ்நாளின் முடிவுவரையில், செல்வம் உய்த்தார் - செல்வத்தைக்கொண்டு அனுபவித்தவர், யாஅர்—? (எ - று.)

உலகத்தில் எல்லாரும் ஏதாவதொருநிந்தையை அடைதலும், யாதாயினுமொருஉபாயத்தால் வாழ்தலும், இடையிலே துன்பத்தை அடைதலும், செல்வத்தையிழத்தலும் இயற்கையென்பது கருத்து. சொல்என்பதற்கு - புகழ்ச்சொல்எனவும் உரைக்கலாம். கால் - காலமென்பதன்விகாரம். அளபெடைகள் - அசைநிறைக்கவந்தன. உபாயம்என்றது - சாம தான பேத தண்டங்களையும், உழவு வர்த்தகம் சேவகம் பிச்சை முதலியவற்றையும். ‘வாழாதாரியார்’ என்றும் பாடம். (ககூ)

கஉ0. தாஞ்செய் வினையல்லாற் றம்மொடு செல்வதுமற்
றியாங்கணுந் தேரிற் பிறிதில்லை - யாங்குத்தாம்
போற்றிப் புனைந்த வுடம்பும் பயமின்றே
கூற்றங்கொண் டோடும் பொழுது.

(இ - ள்.) தேரின் - ஆலோசித்துப்பார்த்தால், தம்மொடு செல்வது - (உடம்பைவிட்டபின்பு) தமதுஉயிரோடு வருவது, தாம் செய் வினை அல்லால் - அவரவர் செய்த கருமமே யல்லாமல், பிறிது - வேறொன்று, யாங்கணும் - எவ்விடத்தும், இல்லை—; கூற்றம் கொண்டு ஓடும் பொழுது - யமன் (உயிரைக்) கொண்டு விரைந்துபோகும்போது, ஆங்கு தாம் போற்றி புனைந்த உடம்பும் - அவ்வாறு தாம் பாதுகாத்து (ஆடையாபரணமுதலியவற்றால்) அலங்கரித்த சரீரமும், பயம் இன்றே - பிரயோஜனமில்லாததேயாம்;

‘உடம்பும் பயமின்றே’ என்றது, இவ்வுலகத்தே கழிந்துவிடுதலால். ‘உடம்பும்’ என்ற உயர்வுசிறப்பும்மை, மற்றைச் செல்வம் இளமை சுற்றம் கல்வி முதலியவற்றின் பயனின்மையையும் உணர்த்திற்று. இப்பாட்டினால், வினை உடம்பு இவற்றின் தன்மை கூறப்பட்டது. மற்று - அசை. யாங்கண் - யாக்கண் என்பதன்மெலித்தல். “முடிப்ப முடித்துப் பின் பூசுவ பூசி, உடுப்ப உடுத்து உண்ப உண்டு” பாதுகாக்கப்படுதலினால், ‘ஆங்குத்தாம் போற்றிப்புனைந்த உடம்பு’ எனப்பட்டது. மற்றியாங்கண் - குற்றியலிகரம். ஏ - தேற்றம். “ஸ்வக்ருதம் துஷ்க்ருதஞ்சைவ கச்சந்தமநுகச்சதி” என்னும் வடநூல்மேற்கோளுங் காண்க. (கஉ0)

## கரு - ம் அதி —தீவினையச்சம்.

அதாவது - பாவத்தைத்தருகின்ற கொடியதொழில்களைச் செய்வதற்கு அஞ்சியொழுகவேண்டும் என்பதைப்பற்றிச் சொல்வது. பொருள்களின்

உண்மையானதன்மையை உணர்ந்தாலல்லது தீவினைதருபவை இவையென அறிந்து அவற்றினின்று அஞ்சி அவற்றைச்செய்யாதொழுகுதல் கூடாமையால், இது மெய்ம்மையென்னும் அதிகாரத்தின்பின் வைக்கப்பட்டது. அச்சம் - தொழிற்பெயர்; அஞ்சு - பகுதி, அம் - விகுதி, வலித்தல் - விகாரம்.

கஉக. துக்கத்துட் டூங்கித் துறவின்கட் சேர்கலா
மக்கட் பிணத்த சுடுகாடு - தொக்க
விலங்கிற்கும் புள்ளிற்குங் காடே புலன்கெட்ட
புல்லறி வாளர் வயிறு.

(இ - ள்.) சுடுகாடு - மயானங்கள், துக்கத்துள் - ஸம்ஸாரத்துன்பங்களிலே, தூங்கி - தங்கியிருந்து, துறவின்கண் - துறவறத்திலே, சேர்கலா - சேராத, மக்கள் - மனிதர்களுடைய, பிணத்த - பிணங்களையுடையன; புலன் கெட்ட - நல்லறிவில்லாத, புல் அறிவு ஆளர் - அற்ப அறிவையுடையவர்களது, வயிறு - வயிறுகளோவென்றால், தொக்க விலங்கிற்கும் புள்ளிற்கும் காடே - தொகுதியான மிருகங்களுக்கும் பறவைகளுக்கும் உரிய இடுகாடுகளேயாம்; (எ - று.)

மனிதப்பிணத்தையுடைய சுடுகாட்டினும் மிருகபட்சிகளின் பிணங்களையுடைய அற்பர்களதுவயிறு இழிவாம் என்பது போதருதலால், குறிப்பால்வந்த வேற்றுமையணி; உபமான உபமேயங்களுள் ஒன்றற்குச் சிறப்புக் கூறுதல்,இவ்வணியின் இலக்கணம்: இதனை வடநூலார் 'வியதிரேகாலங்காரம்' என்பர். இங்கே உபமானத்தினும் உபமேயத்துக்கு விசேஷம் சொல்லப்பட்டது. துறவிகளது தூய உடல் சுடுகாட்டிற்சேர்த்திச்சுடப்படாமல் சிறந்ததோரிடத்திற் சேமஞ்செய்து புனிதமாய்போற்றப்படுதலால், அதனை ஒழித்து 'துக்கத்துட் டூங்கித் துறவின்கட் சேர்கலா, மக்கட் பிணத்த சுடுகாடு' என்றார். சுடுகாடு - பால்பகா அஃறிணைப்பெயர்: (இறந்தவரைச்) சுட்டு எரிக்குங் காடு. விலங்கு - (மனிதரைப்போலன்றிக்கே) குறுக்காகநின்று உணவு முதலியவற்றைக் கொண்டு நடப்பது; இது, 'திர்யக்' என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு. 'புலன்கெட்ட' என்றது, உயிர் உய்வதற்கு உபாயமாகிய தத்துவஞானத்தை உடைத்தாகாமையால். 'புல்லறிவாளர்' என்றது, உண்ணல் உடுத்தல் உறங்கல் முதலியவற்றுக்கு உரிய சாதாரண அறிவை உடைமையால். பிணத்த - அன்சாரியை பெறாத பலவின்பால் முற்று. இப்பாட்டால், மாம்சபோஜனம் தீவினையென்பது கூறப்பட்டது. (கஉக)

கஉஉ. இரும்பார்க்குங் காலரா யேதிலார்க் காளாய்க்
கரும்பார் கழனியுட் சேர்வர் - சுரும்பார்க்குங்
காட்டுளாய் வாழுஞ் சிவலுங் குறும்பூழுங்
கூட்டுளாய்க் கொண்டுவைப் பார்.

(இ - ள்.) சுரும்பு - வண்டுகள், ஆர்க்கும்-ஆரவாரிக்கின்ற, காட்டுள் - வனத்திலே, ஆய் - பொருந்தி, வாழும் - வாழ்கின்ற, சிவலும் குறும்பூழும்- கவுதாரி காடை முதலான பறவைகளை, கூட்டுள் - கூண்டினுள்ளே, ஆய் - ஆகும்படி, கொண்டு வைப்பார் - கொண்டுபோய் வைத்து வளர்ப்பவர்கள், (மறுபிறப்பில்), இரும்பு ஆர்க்கும் காலர் ஆய் - இருப்புவிலங்குகள் ஒலிக்கின்ற கால்களையுடையவர்களாய், ஏதிலார்க்கு ஆள் ஆய் - அயலார்க்கு அடிமைகளாய், கரும் பார்-வட்டைநிலங்களிலும், கழனியுள்- விளைநிலங்களிலும், சேர்வர் - (வேலைசெய்தற்குப்) போய்ச்சேர்வர்கள்.

கரும்பார் - கருமையான பார்; இங்கே, கருமை - வலிமை: அதாவது - வட்டையாயிருத்தல்; பயனில்லாத நிலம். இனி, இருளுலகமாகிய தாமிஸ்ரம் என்னும் நரகவிசேட மென்று உரைப்பாருமுளர். கரும்பு ஆர் எனப்பிரித்து - கரும்புகள் விளைகிற கழனி யென்றும் உரைப்பர். சுரும்பு - வண்டுகளில் ஓர்சாதி. ஆய் என்னுஞ்சொல் இரண்டனுள், பின்னது - ஆக என்னும் எச்சத்தின் திரிபு. வைப்பார் - பெயர். பறவைகளைக் கொன்று தின்பதேயன்றி அவற்றைப்பிடித்துக் கூட்டிலடைத்துவருத்துவதுந் தீவினை யென்பது இதனாற் கூறப்பட்டது. தசகுமாரசரிதத்துள் அன்னப்பார்ப்பை நூலிட்டுக் காலைக்கட்டின பாவத்தாற் பின்பு வெள்ளிவிலங்கு காலிற் கிடந்த தென்று ஆசாரியர் கூறியவாறும், சீவகசிந்தாமணியுள் முற்பிறப்பில் அன்னப்பார்ப்பைச் சுற்றத்தினின்றும்பிரித்துச்சிறைவைத்ததீவினையாற் சீவகன் சுற்றத்தினின்றும்பிரிந்து சிறைப்பட்டானென்று சாரணர்கூறியவாறும் உணர்க. "பூவைகிளி தோகைபுணரன்னமொடு பன்மா,யாவையவை தங்கிளையி னீங்கியழ வாங்கிக்,காவல்செய்து வைத்தவர்க டங்கிளையி னீங்கிப், போவர்புகழ் நம்பியிது பொற்பிலது கண்டாய்" என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளையுங் காண்க. சிவல், குறும்பூழ் - மற்றப்பறவைகட்கும் உபலக்ஷணம். இரும்பு - விலங்குக்குக் கருவியாகுபெயர். (கஉஉ)

கஉங. அக்கேபோ லங்கை யொழிய விரலழுகித்
துக்கத் தொழுநோ யெழுபவே - யக்கா
லலவனைக் காதலித்துக் கான்முரித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால்.

(இ - ள்.) அக்கால் - முற்பிறப்பில், அலவனை - நண்டை, காதலித்து - விரும்பி, கால் முரித்து - காலை ஒடித்து, தின்ற - தின்றதனாலாகிய, பழவினை - பழைய தீவினை, வந்து அடைந்தக்கால் - (பிற்பிறப்பில்) வந்துசேர்ந்தால், (அத்தீவினைசெய்தவர்), அக்கே போல் - சங்குமணிபோல, அம் கை ஒழிய - அகங்கைமாத்திரம் நிற்க, விரல் அழுகி - விரல்கள் அழுகிப்போய், துக்கம் தொழு நோய் எழுப - (மிக்க) துன்பத்திற்கு இடமான குஷ்டவியாதி உண்டாகப்பெறுவர்; (எ - று.)

நண்டைமுறித்துத்தின்றவர்க்குக் குட்டநோயுண்டா மாதலால் அதுவுந் தீவினை யென்பது கருத்து. "அகமுனர்ச் செவிகை வரினிடை யனகெடும்" என்னும் விதியால், அகம் + கை = அங்கை எனப் புணர்ந்தது. தொழுநோய் - தொழுவாகிய நோய்; இருபெயரொட்டுப்பண்புத்தொகை. "உயர்திணை தொடர்ந்த பொருள்முத லாறும், அதனொடு சார்த்தி னத்திணை முடிபின" என்னுஞ் சூத்திரத்தால், நோய் என்னும் அஃறிணையெழுவாய் 'எழுப' என்னும் உயர்திணையெழுவாயின் முற்றைக் கொண்டது; திணைவழுவமைதி. எழுப- உயர்திணைமுற்று; ப-விகுதி: இது—எதிர்காலத்தையும்பலர்பாலையுங்காட்டும்; [நன் - பத - கஅ, வினை - அ.] தின்ற பழவினை - 'சங்குசுட்டசுண்ணம்பு' என்பதிற்போலப் பெயரெச்சம் காரணப்பொருளதாய்க் காரியப்பெயரைக் கொண்டது. ஏ - தேற்றம். (கஉங)

கஉச. நெருப்பழற் சேர்ந்தக்கா னெய்போல் வதூஉ
மெரிப்பச்சுட் டெவ்வநோ யாக்கும் - பரப்பக்
கொடுவினைய ராகுவர் கோடாருங் கோடிக்
கடுவினைய ராகியார்ச் சார்ந்து.

(இ - ள்.) நெய் போல்வதூஉம் - நெய்யும், நெருப்பு அழல் சேர்ந்தக்கால் - நெருப்பினது வெப்பத்தைத் தான்சேர்ந்தால், எரிப்ப சுட்டு-

(உடம்பை) எரிக்கும்படி காய்ந்து, எவ்வம் நோய் ஆக்கும் - (தன்னைச்சார்ந்தவர்க்குத்) துன்பந்தரும் நோயை உண்டாக்கும்;(அதுபோலவே),கோடாரும்-(நல்லொழுக்கத்தில்) தவறாத யோக்கியர்களும், கடு வினையர் ஆகியார் சார்ந்து - கடுமையான பாதகச்செயல்களையுடைய அயோக்கியரைச் சேர்ந்து, கோடி - (அச்சேர்க்கையால் தம் ஒழுக்கத்தில்) தவறி, பரப்ப கொடு வினையர் ஆகுவர் - மிகவுங்கொடிய தொழில்களைச் செய்பவராவர்; (எ-று.)

திருஷ்டாந்தாலங்காரம். "தீயகந்த முள்ளதொன்றைச் சேர்ந்திருப்ப தொன்றுக்குத், தீயகந்த மேறுந் திறமதுபோல்—தீய,குணமுடையோர் தங்களுடன் கூடியிருப் பார்க்குக், குணமதுவே யாஞ் செறிவு கொண்டு" என்பது காண்க. 'நெய்யும்' என்ற உயர்வுசிறப்பும்மை - அதனது தண்மையையும், எத்தன்மையானபண்களையும் ஆற்றுமியல்பையும் காட்டிற்று. போல்வது-ஒப்பில்போலி;"ஒப்பில் போலியு மப்பொருட் டாகும்" என்னுந் தொல்காப்பியச்சூத்திரத்தின் உரையில், ஒன்றற்கொன்றுஒக்குமென்னும்பொருள் தன்கண்இன்றிவரும் போலியென்னுஞ்சொல் சிறிதுபொருளுணர்த்தி உரையசையாய்நிற்பதற்கு இதனை உதாரணங்காட்டியிருத்தல் காண்க. அளபெடை, செய்யுளோசைநிறைக்கவந்தது. இனி, கோடிக்கடு வினையர் எனஎடுத்து - மிகப்பலவாகிய தீவினைகளையுடையவர் என்றுமாம். தீயோர்சேர்க்கையினால் வருந் தீமை இதனாற் கூறப்பட்டது. (கஉச)

கஉரு. பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும் - வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே
தானே சிறியார் தொடர்பு.

(இ - ள்.) பெரியவர் கேண்மை - (அறிவாற்) பெரியோர்களது சினேகம், பிறை போல - இளஞ்சந்திரன்போல, நாளும் - தினந்தோறும், வரிசைவரிசையா - முறையே, நந்தும் - வளரும்; சிறியார் தொடர்பு - (அறிவினால்) சிறியவரது சினேகமோவென்றால், வான் ஊர் மதியம் போல் - ஆகாயத்திற் செல்லும் பூர்ணசந்திரன்போல, வைகலும் - நாள்தோறும், வரிசையால் - முறையாக, தானே - பிறருடையமுயற்சியில்லாமலே, தேயும் - குறைந்துவிடும்; (எ - று.)

அறிவுடையாரும் அறிவுடையாருஞ் செய்த நட்பு முன்சுருங்கிப் பின் பெருகுதற்கும், அறிவிலாரும் அறிவிலாருஞ் செய்த நட்பு முன்பெருகிப்பின் சுருங்குதற்குங் காரணம், தமக்குள் ஒருவர் ஒருவருடையகுணத்தை முன் அறியாமலிருத்தலும் பின்அறிதலுமாம். "நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப், பின்னீர பேதையார் நட்பு" என்னுந் திருக்குறளை நோக்குக. கேண்மை, தொடர்பு, நட்பு என்பன - ஒருபொருட்சொற்கள். இதனால், தீவினைதருவதான தீயோர்தொடர்பின் தன்மை கூறப்பட்டது. (கஉரு)

கஉசு. சான்றோ ரெனமதித்துச் சார்ந்தாய்மற் சார்ந்தாய்க்குச்
சான்றாண்மை சார்ந்தார்க ணில்லாயிற் - சார்ந்தோய்
சாந்தகத் துண்டென்று செப்புத் திறந்தொருவன் [கேள்
பாம்பகத்துக் கண்ட துடைத்து.

(இ - ள்.) (நீ), சான்றோர் என மதித்து - (இவர் எல்லாநற்குணங்களாலும்) நிறைந்தவரென்று நன்குமதித்து, சார்ந்தாய் - (சிலரைச்)சினேகித்தாய்; சார்ந்தாய்க்கு - (அவ்வாறு) சினேகித்தஉனக்கு, சான்றாண்மை - அந்நற்குணநிறைவுடைமை, சார்ந்தார்கண் - (உன்னாற்) சேரப்பட்டஅவரிட

த்து, இல்ஆயின் - இல்லாமற்போமானால், (அது), ஒருவன்—, சாந்து அக த்து உண்டு என்று - வாசனைத்திரவியம்இதனுள்ளே இருக்கிறதென்று எண்ணி, செப்பு திறந்து - ஒருசிமிழைத் திறந்து, அகத்து-அதனுள்ளே,பாம்பு கண்டது-பாம்பைக்கண்ட தன்மையை,உடைத்து-உடையது;சார்ந்தாய்-சினேகஞ்செய்தவனே! கேள் - (இதனைக்) கேட்டறிவாயாக; (எ - று.)

ஒருகாரியத்தைச் செய்யத்தொடங்கி இஷ்டத்தையடையாது அநிஷ்டத்தையடைதலாகிய தகுதியின்மையணியை இச்செய்யுளிலே காண்க; இதனை வடநூலார் விஷமாலங்கார மென்பர். மன் - அசை; மிகவும் என்றும் பொருள்கொள்ளலாம். சார்ந்தாய்க்கு - முன்னிலையொருமைவினையாலணையும்பெயர், நான்காம்வேற்றுமை. சான்றாண்மை - நற்குணங்களால் நிறைந்து அவற்றை ஆளுந்தன்மை. சந்து - சந்தனம்என்னும் வடமொழியின் விகாரம். சான்றோரெனமதித்துச் சார்தலுக்கு- சார்தகத்துண்டென்று செப்புத்திறத்தலும், அங்குச்சான்றாண்மையின்மையைக்காணுதற்கு-பாம்பகத்துக்காணுதலும் உபமானமெனக்காண்க. இதனாலும் மேலிரண்டு பாட்டுக்களாலும், அஞ்சப்படுவதாகிய தீயோர்தொடர்பாலுண்டாந்தீமை கூறப்படுகின்றது. நன்குஆராயாமல் ஒருவரோடுநட்புச்செய்தல் பெருந்தீமைவருதற்குக்காரணமா மென்பதை உபமானத்தால் விளக்கினார். (கஉசு)

கஉஎ. யாஅ ரொருவ ரொருவர்த முள்ளத்தைத்
தேருந் துணைமை யுடையவர்—சாரற்
கனமணி நின்றிமைக்கு நாடகேண் மக்கண்
மனம்வேறு செய்கையும் வேறு.

(இ - ள்.) சாரல் - மலைப்பக்கங்களிலே, கனம் மணி - பெருமைபொருந்திய இரத்தினங்கள், நின்று - நிலைபெற்று, இமைக்கும்-விளங்குகின்ற, நாட - நாட்டையுடைய அரசனே! கேள் - கேட்பாயாக; ஒருவர்தம் உள்ளத்தை - வேறொருவருடைய மனத்தை, தேரும் துணைமை உடையவர்-ஆராய்ந்தறியும்வல்லமையையுடையவராகிய, ஒருவர் - ஒருத்தர், யாஅர்-எவருளர்? [ஒருவருமில்லை]; (ஏனென்றால்), மக்கள் மனம் வேறு செய்கையும் வேறு-மனிதர்களது எண்ணமும் வேறு செய்யுந்தொழிலும் வேறு;

உலகத்தில் மனிதர்பலர்க்கு மனமுஞ்செயலும் ஒற்றுமைப்பட்டிராமல் வேறுபட்டிருக்குமாதலால் ஒருவரதுஉள்ளம்இத்தன்மையதென்று அவர்செய்கையைக்கொண்டுதெளியலாகா தென்பது கருத்து. எனவே, பலநாள் பலவழியால் ஆராய்ந்து ஒருவரை நட்புக்கொள்ளல்வேண்டு மென்பதாம். அளபெடை, அசைநிறைத்தது. துணைமை, மை-பண்புப்பெயர்விகுதி. கேள்-முன்னிலையசையுமாம். வேறு-ஐம்பால்மூவிடத்துக்கும்பொது. (கஉஎ)

கஉஅ. உள்ளத்தா னள்ளா துறுதித் தொழிலராய்க்
கள்ளத்தா னட்டார் கழிகேண்மை—தெள்ளிப்
புனற்செதும்பு நின்றலைக்கும் பூங்குன்ற நாட
மனத்துக்கண் மாசாய் விடும்.

(இ - ள்.) புனல்-அருவிநீர், தெள்ளி - தெளிவுடையதாய், செதும்பு-சேற்றை, நின்று அலைக்கும் - இடைவிடாது ஒழித்துநிற்கிற, பூ குன்றம்-அழகிய மலையையுடைய, நாட - நாட்டையுடையவனே! உள்ளத்தால் நள்ளாது - மனப்பூர்வமாய்ச் சினேகஞ்செய்யாமல், உறுதி தொழிலர் ஆய்-(தங்களுக்கு) நன்மையையே தேடுந் தொழிலையுடையவராய், கள்ளத்தால் நட்டார் - வஞ்சனையாற் சினேகஞ்செய்தவரது, கழி கேண்மை - மிகுந்த

நட்பு, மனத்திக்கண் மாசு ஆய்விடும் - மனத்திற் குற்றமாய்முடியும்; (எ - று.)—ஆதலால், அதற்கு அஞ்சவேண்டு மென்பதாம்.

மனத்துக்கண்மாசாய்விடும் என்றது - பின்பு பலதீமையை விளைக்கு மென்றபடி. பூங்குன்றம் - பண்புத்தொகை; அழகாகிய குன்ற மென்க.

௧௨௯. ஒக்கிய வொள்வாட னொன்னார்கைப் பட்டக்கா
லூக்க மழிப்பதூஉ மெய்யாகு—மாக்க
மிருமையுஞ் சென்று சுடுதலா னல்ல
கருமமே கல்லார்கட் டீர்வு.

(இ - ள்.) ஒக்கிய - (போரிற் பகைவரைக் கொல்லும்பொருட்டு ஒருவன்)உயரஎடுத்த, ஒள் வாள்-பிரகாசமான வாளாயுதமானது,தன் ஒன்னார் கை பட்டக்கால் - அவனது பகைவரது கையில் அகப்பட்டுவிட்டால், ஊக்கம் அழிப்பதூஉம்-பகைவரைஅழியாமையோடுஅவன்வலிமையைநாசப் படுத்துவதும், மெய் ஆகும்-(இம்மையில்)உண்மையாம்; (அதுபோலவே), ஆக்கம் - (மூடர்க்குத் தான்செய்யும்) உபகாரம், இருமையும் சென்று சுடுதலால் - இம்மை மறுமை யென்கிற இரண்டிடத்தும் தொடர்ந்து தம்மை வருத்துவதனால், கல்லார்கண் தீர்வு - அறிவில்லாதவரிடத்தினின்றும் நீங்குதல், நல்ல கருமமே - நல்ல காரியமேயாம்; (எ - று.)

பகைவர்கையில் தவறிஅகப்பட்ட தனதுவாளினால் உண்டாகுந் தீமையினும் அறிவில்லார்க்குத் தான்செய்த உபகாரத்தா லுண்டாகுந்தீமைக்கு மிகஅஞ்சவேண்டு மென்பது கருத்து; ஏனெனில், பகைவர்கையிற்பட்ட வாள் இம்மையில் தன்உயிர்வாழ்க்கையையொழித்தாலும் மறுமையில் வீரசுவர்க்கஇன்பத்திக்குக் காரணமாம்: அறிவிலார்க்குச்செய்தஉபகாரமோ செய்தவனுக்கு இம்மையிற்பழியையும் மறுமையிற்பாவத்தையுந் தந்து இருமையுங்கெடுக்கு மாதலின். ஒக்கிய என்னும் இறந்தகாலப் பெயரெச்சத்தில், ஓங்கு என்பதன் பிறவினையாகிய ஒக்கு - பகுதி. ஒன்னார்- ஒன்றார் என்பதன்மரூஉ; சேராதவரென்றுபொருள். அழிப்பதூஉம் - இன்னிசையளபெடை. (௧௨௯)

௧௩0. மனைப்பாசங் கைவிடாய் மக்கட்கென் றேங்கி
யெனைத்தூழி வாழ்தியோ நெஞ்சே—யெனைத்துஞ்
சிறுவரையே யாயினுஞ் செய்தநன் றல்லா
லுறுபயனோ வில்லை யுயிர்க்கு.

(இ - ள்.) நெஞ்சே - மனமே! மனை பாசம் கைவிடாய்-மனையாளிடத்துள்ள அன்பை விடாமல், மக்கட்கு என்று ஏங்கி - பிள்ளைகளுக்காகவும் இரங்கி, எனைத்து ஊழி வாழ்தியோ - எத்தனைகாலம் வாழ்வாயோ? எனைத்தும் சிறு வரையே ஆயினும் - எவ்வளவு சிறியதாயினும், செய்த நன்று அல்லால்-(ஒருவன்) செய்த நற்காரியமேயல்லாமல், உயிர்க்கு—(அவனது) உயிருக்கு, உறு பயனோ - அடையும்படியான நற்பயனோ, இல்லை - வேறில்லை; (எ - று.)

மனை - மனையாளுக்கு இடவாகுபெயர்; இனி, இல்வாழ்க்கையென்றுமாம். கைவிடாய் - முற்றெச்சம். கை - உபசர்க்கம்; தனக்கென்று ஒரு பொருளில்லாமல் வினையையடுத்துவந்தது. சிறு வரை-சிறிய அளவு. ஓகாரம் இரண்டனுள், முன்னது - இரக்கம். பின்னது - உயர்வுசிறப்பு. உயிர்க்கு உறுதியாகிய நல்வினையைத் தேடாது ஸம்ஸாரபாசபந்தத்தி லகப்பட்டு உழன்று வீண்காலங்கழித்தலாலாகுந் தீவினைக்கு அஞ்சவேண்டு

மென்பது இதனுற் கூறப்பட்டது. 'எனைத்தூழிவாழ்தியோ' என்றதனுல், யாக்கைநிலையாமையைக்குறிப்பித்தவாறு. முதலடியினுல், பெண்டு பிள்ளைகள் மறுமைக்கு உதவாமையை உணர்த்தினுர். (கஙo)

இரண்டாவது

# பொருட்பால்.

அதாவது - இல்லறத்தின்வழிப்படுவனவாகிய பொருளினின்பங்களுள் இம்மைமறுமை இரண்டையுந் தருவதாகிய பொருளை உணர்த்தும் பாகம். பொருளாவது-தருமவழியிற்சேர்க்கப்பட்ட பொன் மணி நெல் முதலியன.

## கச-ம் அதி.—கல்வி.

அதாவது - கற்பதற்குரிய நூல்களைக் கற்றலைப்பற்றிச் சொல்வது. அவை - அறநூல், நீதிநூல் முதலியன. பொருள்பெறுதற்கு முதற்காரணமாயும், பெற்றபொருளைக்காத்தற்கும் பிறர்க்குச்செலவழித்துத் தானும் அனுபவித்தற்குந் துணைக்காரணமாயும் இருத்தல்பற்றி, கல்வி - முதலில் வைக்கப்பட்டது. கல்வி - தொழிற்பெயர்; வி - விகுதி.

கஙக. குஞ்சி யழகுங் கொடுந்தானைக் கோட்டழகு
மஞ்ச ளழகு மழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யா மென்னு நடுவு நிலைமையாற்
கல்வி யழகே யழகு.

(இ-ள்.) குஞ்சி அழகும்-மயிர்முடியின் அழகும், கொடு தானை கோடு அழகும் - மடிப்புள்ள ஆடையினது கரையின் அழகும், மஞ்சள் அழகும் - பூச்சினது அழகும், அழகுஅல்ல - அழகாகமாட்டா; நெஞ்சத்து நல்லம் யாம் என்னும் நடுவுநிலைமையால் - மனத்தில் யாம் நற்குணமுடையோ மென்றுகாண்கிற கோணுதலில்லாத தன்மையால், கல்வி அழகே அழகு - படிப்பினுலுண்டாகும் அழகே அழகாம்; (எ - று.)

குஞ்சி - ஆண்மயிர்; பங்கி, குடுமி, சிகை என்பனவும் இவ்வாறே: அளகம், ஓதி, கூந்தல், ஐம்பால், கோதை என்பன-பெண்மயிரின்பெயராம். கொடுமை - வளைவு; கொடுங்கோல், கொடுவாள்,கொடுமரம், கொடும்புறம்என்றவிடங்களிலுங்காண்க:இங்கே,மடிப்புக்குக் கொள்ளப்பட்டது. மஞ்சள் - மற்றும் பலவகைப்பட்ட மேற்பூச்சுக்களுக்கும், கொடுந்தானைக் கோடு - ஆபரணங்களுக்கும், குஞ்சி - பிறஉறுப்புக்களுக்கும் உபலக்ஷணம். நல்லம்-தன்மைப்பன்மைக்குறிப்புமுற்று; அம்-விகுதி. ஏ - பிரிநிலை. குஞ்சியழகுமுதலியன தம்மைப்பார்க்கும்பிறர்க்கேயன்றித் தமக்கு இன்பந்தருவனஅல்ல கல்விஒன்றே தம்மனத்துக்கு இன்பந்தருவது என்பார், 'நெஞ்சத்து நல்லம்யா மென்னு நடுவு நிலைமையால்' என்றுர். இனி, மனத்தில் நல்லவர்களாயிருக்கக்கடவோம் யாமென்று எண்ணுகிற பக்ஷபாதமில்லாததன்மையோடு கூடிய கல்வியினதுஅழகே அழகென்று உரைப்பாருமுளர். ஆடவர்க்குஉரிய குஞ்சியை முதலிலும், மகளிர்க்குஉரிய மஞ்சளை இறுதியிலும், இருவர்க்கும்பொதுவாகிய தானையை இடையிலும் வைத்துக் கூறியதனுல், இப்பாட்டை ஆண்கல்விக்கும் பெண்கல்விக்கும் பொதுவென்பர். "மயிர்வனப்புங் கண்கவரு மார்பின் வனப்பு, முகிர்வனப்புங் காதின் வனப்புஞ்—செயிர்தீர்ந்த, பல்லின் வனப்பும் வனப்பல்ல நூற்கியைந்த, சொல்லின் வனப்பே வனப்பு" என்னுஞ் சிறுபஞ்சமூலச் செய்யுளையும், "இடைவனப்புந் தோள்வனப்பு மீடின் வனப்பு, நடைவனப்பு நாணின்

வனப்பும் - புடைசால், கழுத்தின் வளைப்பும் வனப்பல்ல வெண்ணேனு, டெழுத்தின் வனப்பே வனப்பு" என்னும் ஏலாதிச்செய்யுளையும் நோக்குக.(கநக)

கநஉ. இம்மை பயக்குமா லீயக் குறைவின்றுந்
றம்மை விளக்குமாற் றாமுளராக் கேடின்று
லெம்மை யுலகத்தும் யாங்காணேங் கல்விபோன்
மம்ம ரறுக்கு மருந்து.

(இ - ள்.) (கல்வியானது), இம்மை - இப்பிறப்பின்பயனாகிய தத்துவஞானத்தை, பயக்கும் - தரும்; ஈய - (பிறருக்குக்) கொடுக்க, [போதித்தலால் என்றபடி], குறைவு இன்று - (செல்வம்போலக்) குறைவுபடாது [மேன்மேல்வளரும்]; தம்மை விளக்கும் - தம்மை (ப்புகழால் நெடுந்தூரமட்டும்) விளங்கச்செய்யும்; தாம் உளர் ஆ கேடு இன்று - தாங்கள் உயிருள்ளவராகவாழுமளவும் அழிதலில்லை; ஆல் - ஆதலால், யாம்—, கல்வி போல் மம்மர் அறுக்கும் மருந்து - கல்விபோல அறியாமையாகிய நோயை ஒழிக்கின்றதொரு மருந்தை, எம்மை உலகத்தும் - எத்தன்மையான உலகத்திலும், காணேம் - காண்கிறோமில்லை; (எ - று.)

இம்மை - பயனுக்கு ஆகுபெயர். கேடு - முதனிலைதிரிந்த தொழிற்பெயர். மைவிகுதி - இம்மையென்பதில் இடப்பொருளையும், எம்மைஎன்பதில் தன்மைப்பொருளையும் உணர்த்திற்று. தேவலோகத்துமருந்தாகிய அமிருதமும் மம்மரறுக்காதாதலால் அதனினுஞ்சிறந்த தென்பது தோன்ற, 'எம்மையுலகத்தும் யாங்காணேங் கல்விபோன், மம்ம ரறுக்கு மருந்து' எனப்பட்டது. இம்மை - செல்வம் எனவுமாம். ஆல் மூன்றும்-அசை.(கநஉ)

கநந. களர்நிலத்துப் பிறந்த வுப்பினைச் சான்றோர்
விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்
கடைநிலத்தோ ராயினுங் கற்றறிந் தோரைத்
தலைநிலத்து வைக்கப் படும்.

(இ - ள்.) களர் நிலத்து பிறந்த - (இழிவான) உவர்நிலத்தில் உண்டான, உப்பினை - உப்பை, சான்றோர் - பெரியோர், விளை நிலத்து நெல்லின் விழுமிது ஆ - விளைகின்ற (நல்ல) நிலத்தில் தோன்றிய நெல்லினுஞ் சிறந்ததாக, கொள்வர் - கொள்ளுவார்கள்; (அதுபோலவே), கடைநிலத்தோர் ஆயினும் — இழிவானசாதியிற் பிறந்தவர்களானாலும்,கற்று அறிந்தோரை (நூல்களைக்) கற்று (அவற்றின் பொருளை) அறிந்தவர்களை, தலை நிலத்து வைக்கப்படும்-மேன்மையான இடத்தில் வைத்துக்கௌரவிக்கவேண்டும்;

பிறப்பைப்பற்றி உயர்வுதாழ்வுபாராட்டாமற் கல்விச்சிறப்பால்நன்கு மதிக்கவேண்டு மென்பது கருத்து. உப்பின்சுவை உணவுக்கு இன்றியமையாததுபோலக் கல்வியறிவு மக்கட்கு இன்றியமையாததென்பது தோன்ற, உப்பினைத் திருஷ்டாந்தமாய் எடுத்துக்கூறினார். உப்பு நெல்லினும் விழுமிதாக் கொள்ளப்படுதலை "ஷண்ணாம்ரஸாநாம்லவணம்ப்ரதாநம்" என்னும் வடநூன்மேற்கோளைக்கொண்டும், "உப்பில்லாப்பண்டங் குப்பையிலே" என்னும் பழமொழியைக்கொண்டும் உணர்க. இனி, நெல்லின் - நெல்லைப்போல எனவும் உரைப்பர். விழுமிது - விழுமமென்னும் உரிச்சொல் லினடியாகப்பிறந்த ஒன்றன்பாற்குறிப்புவினையாலணையும்பெயர். "நாற்பாற் குலத்தின் மேற்பா லொருவன்,கற்றில னாயிற் கீழிருப் பவனே", "எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும், அக்குடியிற் கற்றோரை வருக வென்பார்", "ஆக்கு மறிவா னலது பிறப்பினுன், மீக்கொ ளுயர்விழிவு வேண்டற்க"என்பன காண்க.வைக்கப்படும்-ஒருவகைவியங்கோள்வினைமுற்று.

கரு௪. வைப்புழிக் கோட்படா வாய்த்தீயிற் கேடில்லை
மிக்க சிறப்பி னரசர் செறின்வவ்வா
ரெச்ச மெனவொருவன் மக்கட்குச் செய்வன
விச்சைமற் றல்ல பிற.

(இ - ள்.) விச்சை - கல்விகள், வைப்புழி - வைக்கப்பட்ட இடத்தில், கோட்படா - (பிறரால்) கவரப்படமாட்டா; வாய்த்து-(கொள்பவர் தக்கவராகக்) கிடைத்து, ஈயின் - (அவருக்குக்) கொடுத்தால், கேடு இல்லை-குறைதலில்லை; மிக்க சிறப்பின் அரசர் - மிகுந்த சிறப்பையுடைய அரசர்கள், செறின் - கோபித்தால், வவ்வார் - அபகரிக்கமாட்டார்கள்; (ஆதலால்), ஒருவன் —, எச்சம் என-ஆக்கமென்று, மக்கட்கு - தன் பிள்ளைகளுக்கு, செய்வன - சேர்த்துவைக்கத்தக்கவை, விச்சை - கல்விப்பொருள்களேயாம்; பிற அல்ல - மற்றைச் செல்வப்பொருள்களல்ல; (எ - று.)

செல்வப்பொருள்கள் கள்வராலும் ஞாதியராதியோராலுங் கவர்ந்து கொள்ளப்படும், பிறர்க்குக்கொடுத்தாற் செலவழிந்துபோம், கொடுங்கோல்மன்னராற் கொள்ளைகொள்ளப்படும்; இத்தன்மையான அபாயங்கள் கல்விப்பொருளுக்கு ஒருகாலும் இல்லை; ஆதலாற் செல்வப்பொருளினுங் கல்விப்பொருளே சிறந்ததென்பது கருத்து. "கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு, மாடல்ல மற்றை யவை", "தந்தை மகற்காற்று நன்றி யவையத்து, முந்தி யிருப்பச் செயல்" என்னுந் திருக்குறள்களை இங்கே அறிக. வைப்பு உழி - வைத்தலையுடைய இடம். கோள் - கொள்ளுதல்; முதனிலைதிரிந்ததொழிற்பெயர். இந்நாலடிநானூற்றில் ஒவ்வொருசெய்யுளும் ஒவ்வொருபுலவரால் தனித்தனி பாடப்பட்டதாதலால், இச்செய்யுளில் 'ஈயிற்கேடில்லை' என்றது - கீழ் "ஈயக்குறைவின்று" என்றதனோடு கூறியதுகூறலென்னுங்குற்றமாகாதென அறிக; மற்றும் இங்ஙனம்வருவனவற்றிற்கெல்லாம் இஃதொக்கும். எச்சம்-(சம்பாதியத்தில்)மிகுந்ததிற் பது; ஆஸ்தி: எஞ்சு - பகுதி, அம் - கர்த்தாப்பொருள்விகுதி, வலித்தல் - விகாரம். விச்சை - வித்யா என்னும் வடமொழித்திரிபு. மற்று - அசை; மற்று, பிற - ஒருபொருட்பன்மொழியெனவுங் கொள்ளலாம். (கரு௪)

கரு௫. கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கிற் பிணிபல—தெள்ளிதி
னாராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகிற் றெரிந்து.

(இ - ள்.) கல்வி கரைஇல - வித்தைகளாகிய கடல்களோ கரையையுடையனவல்ல; கற்பவர் நாள் சில - (அவற்றைப்) படிப்பவரது வாழ்நாட்களோ சிலவாம்; மெல்ல நினைக்கின் பிணி பல - பொறுத்து ஆலோசித்துப்பார்த்தால் (அவ்வாழ்நாள்சிலவற்றுள்ளும்) நோய்களோ பல உள்ளன; (ஆதலால்), நீர் ஒழிய பால் உண் குருகின் - நீரை ஒழியப் (பிரித்துவிட்டுப்) பாலைமாத்திரமே உண்கிற அன்னப்பறவைபோல, தெரிந்து - (நூல்களின் தன்மைகளை) அறிந்து, தெள்ளிதின் ஆராய்ந்து - தெளிவாக ஆராய்ச்சி செய்து, அமைவு உடைய - சாரமாகவுள்ள ஞானநூல்களையே, கற்ப - (விவேகிகள்) படிப்பார்கள்; (எ - று.)

'அமைவுடைய என்றது' - வேதாந்தநூல்களை. பாலையும் நீரையுங் கலந்துவைத்தால் அன்னப்பறவை நீரைப்பிரித்துவிட்டுப் பாலையே உண்கிறதென்பது நூற்றுணிபு; இதுபற்றியே அன்னம் தலைமாணுக்கர்க்கு உவ

மைகூறப்படும். மெல்ல - மென்மையென்னும் பண்படியாகப் பிறந்த குறிப்புவினையெச்சம். உடைய - பெயர். கரை - எல்லை, முடிவு. (௧௩௫)

௧௩௬. தோணி யியக்குவான் றொல்லை வருணத்துக்
காணிற் கடைப்பட்டா னென்றிகழார் — காணா
யவன்றுணையா வாறுபோ யற்றேநூல் கற்ற
மகன்றுணையா நல்ல கொளல்.

(இ - ள்.) (கீழ்ப்பட்டசாதியிற்பிறந்தவனாயினும்), நூல் கற்ற மகன் - சாஸ்திரங்களைப் படித்த மனிதனை, துணை ஆ -(ஒருவன்) துணையாகக்கொண்டு, நல்ல - சிறந்த நூற்பொருள்களை, கொளல் - அறிந்துகொள்ளுதலானது, தோணி இயக்குவான் - மரக்கலத்தைச் செலுத்துபவன், தொல்லை வருணத்து - பழமையான சாதிகளுள், கடைப்பட்டான் என்று - இழிவான சாதியிற் பிறந்தவனென்று, காணின் - (யாவரும்) அறிந்திருந்தும், இகழார் - (அவனை) இகழ்ச்சிசெய்யாதவர்களாய், அவன் துணை ஆ - அவனைத் துணையாகக்கொண்டு, ஆறு போய் அற்றே - ஆற்றுவெள்ளத்தைக் கடந்துபோனாற்போன்றதாம்; (எ - று.)

உவமையணி. தாழ்ந்தசாதியானாயினும் மீகாமனைக்கொண்டே இன்றியமையாமல் வெள்ளத்தைக்கடப்பதுபோலத் தாழ்ந்தசாதியானாயினுங் கற்றவனைக்கொண்டே அவசியமானபொழுது நூல்களைக்கற்கவேண்டுமென்க. பிறப்பினாலுண்டாகும் பெருமையினுங் கல்வியினாலுண்டாகும் பெருமை சிறந்ததென்றபடி. தோணி - த்ரோணீ என்னும் வடமொழிச்சிதைவு. இயக்கு - இயங்கு என்பதன் பிறவினை. சாதிவிகற்பஞ் சிருஷ்டிகாலத்தே ஏற்பட்டதன்றி இடையிலேவந்ததன்றென்பது தோன்ற, 'தொல்லைவருணம்' எனப்பட்டது. காணாய் - முன்னிலையசை; நீ அறி என்றுமாம். போய் - போனெலென்னும் எச்சத்தின் திரிபு; இனி, போயற்று என்பதை-போயதற்று என்பதன் விகாரமாகவுங் கொள்ளலாம். அற்று - அன் என்னும் உவமவுருபிடைச்சொல்லடியாகப் பிறந்த ஒன்றன்பாற்குறிப்புமுற்று; று-விகுதி. 'கற்றவன்' என்னாது 'கற்றமகன்' என்றது, கல்லாதவன் மனிதருள் வைக்கப்படாது விலங்குகளோடு ஒப்ப மதிக்கப்படுவா னென்பது விளங்குதற்கு. ஏ - அசை. நல்ல - பெயர். (௧௩௬)

௧௩௭. தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையா
ரிகலில ரெஃகுடையார் தம்முட் குழீஇ
நகலி னினிதாயிற் காண்பா மகல்வானத்
தும்ப ருறைவார் பதி.

(இ - ள்.) தவல் அரு - தவறுதலில்லாத, தொல் - பழமையான [தொன்றுதொட்டுப் பரம்பரையாகவருகின்ற], கேள்வி - நூற்கேள்விகளினது, தன்மை - தன்மையை, உடையார் - உடையவர்களும், இகல் இலர் - பகைமைக்குணமில்லாதவர்களும், எஃகு உடையார் தம்முள் - புத்திக்கூர்மையுடையவர்களும் ஆகிய கற்றவர்களுடைய குழாத்தினுள்ளே, குழீஇ - கூடியிருந்து, நகலின் - மகிழ்தலைக்காட்டிலும், இனிது ஆயின் - இன்பந்தருவதாமானால், அகல் வானத்து உம்பர் உறைவார் பதி - பரந்த விண்ணுலகத்தின்மேல் வாசஞ்செய்கிற தேவர்களது நகரமாகிய அமராவதியை, காண்பாம் - (யாம்) காணக்கடவோம்; (எ - று.)

அறிவுடையோருடன் கூடிமகிழ்தலினும் இனியதன்றாதலின் தேவர்பதியை யாம் காணக்கடவேமல்லேம் எனக் கற்றறிந்தோரது கூட்டுற

வின் அருமைபெருமைகளைத் தெரிவித்தபடி. ஒவ்வொருவனும் பெரும்பாலுந் தன்னைப்பற்றித் தான் பன்மையாகவே எண்ணுதல் இயல்பாதலால், ‘காண்பாம்’ எனப்பட்டது ; தனித்தன்மைப் பன்மை. கற்றவர்களோடு சினேகித்து அனுபவிக்குமானர் தஞ் சுவர்க்கானுபவத்தா லுண்டாகுமானந் தத்தினுஞ் சிறந்ததென்பது கருத்து; கற்றோர்நேசத்தைப்போலச் சுவர்க்காநுபவந் தத்துவஞானத்துக்கும் முத்திபெறுதற்கும் ஏதுவாகாததனால். தவல்-தொழிற்பெயர்; தபுஎன்பதன்மரூஉவாகிய தவு-பகுதி. கேள்வியாவது-கேட்கப்படுநூற்பொருள்களைக் கற்றறிந்தார்கூறக் கேட்டல் ; இது, கற்றவர்க்குக் கல்வியறிவை வலியுறுத்துதலாலும், கல்லாதவர்க்கும் அவ்வறிவை உண்டாக்குதலாலும் சிறந்ததாமென அறிக. கேள்வி - தொழிற்பெயர். எஃகு - ஆயுதம் : கூர்மை ; இங்கே, புத்திநுட்பம். குழீஇ அல்லது குழுவிஎன்பது - குழீஇ என விகாரப்பட்டு அளபெடுத்தது ; இது, சொல்லிசையளபெடையின்பாற்படும். உம்பர் - மேலிடம் ; இங்கே, சுவர்க்கம். அகல்வானம் - வினைத்தொகை. (கருஎ)

கரு-அ. கனைகடற் றண்சேர்ப்ப கற்றறிந்தார் கேண்மை
நுனியிற் கரும்புதின் றற்றே—நுனிநீக்கித்
தூரிற்றின் றன்ன தகைத்தரோ பண்பிலா
வீரமிலாளர் தொடர்பு.

(இ - ள்.) கனை - ஒலிக்கின்ற, கடல் - கடலினது, தண் - குளிர்ச்சியான, சேர்ப்ப -துறையையுடையவனே ! கற்று-(நல்லநூல்களைப்)படித்து, அறிந்தார் - (அவற்றின்பொருளை) அறிந்தவர்களது, கேண்மை - சினேகமானது, நுனியின் கரும்பு தின்று அற்று - நுனியிலிருந்து (அடிவரையிற்) கரும்பைத் தின்றாற்போன்றது [வரவர இனிமைதரும்]; பண்பு இலா - (அக்கற்றறிவாகிய) குணமில்லாத, ஈரம் இலாளர் -அன்பில்லாதவர்களுடைய, தொடர்பு - சினேகம் ,நுனி நீக்கி - (அக்கரும்பை)நுனியிலிருந்துதின்னுதலை ஒழித்து, தூரின் தின்று அன்ன-அடியிலிருந்து தின்றாற்போன்ற, தகைத்து-தன்மையையுடையது [வரவர இன்னாமையைத்தரும்] ; (எ - று.)

பயனுவமை. இதனை கஉரு-ம் கவியோடு ஒப்பிடுக. (கரு-அ)

கரு-கூ. கல்லாரே யாயினுங் கற்றாரைச் சேர்ந்தொழுகி
னல்லறிவு நாளுந் தலைப்படுவர் - தொல்சிறப்பி
னொண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலாற் புத்தோடு
தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு.

(இ - ள்.) தொல் சிறப்பின் - பழமையான [இயற்கையாகவுள்ள] சிறப்பையும், ஒள் நிறம் - பிரகாசமான நிறத்தையும் உடைய, பாதிரி பூ - பாதிரிமரத்தின் மலரை, சேர்தலால் - அடைதலினால், புது ஓடு - புதிதான பானையோடானது, தண் நீர்க்கு - (தன்னிடமுள்ள)குளிர்ந்த நீருக்கு, தான் பயந்து ஆங்கு - தான்(வாசனையைக்)கொடுத்தாற்போல, கல்லாரே ஆயினும்-(தாம்) படியாதவர்களேயானாலும், கற்றாரை சேர்ந்து ஒழுகின் - படித்தவர்களைச் சேர்ந்துநடந்தால், நல் அறிவு நாளும் தலைப்படுவர் - (அச்சேர்க்கையால்) நல்லஅறிவு நாள்தோறும் உண்டாகப்பெறுவர் ; (எ - று.)

புத்தோடு - கல்லார்க்கும், பாதிரிப்பூ - கற்றார்க்கும், நல்லபரிமளம்-நல்லறிவுக்கும் உவமையெனக் காண்க. ‘புத்தோடுதண்ணீர்க்குத்தான்பயந்தாங்கு’ என்ற உவமையால், முன்னேகல்லாதவர் பின்புகற்றோரதுசேர்க்கையால் தாமடைந்த அறிவைத் தம்மைச்சார்ந்தவர்க்குந் தருவரென்பது

பெறப்பட்டது. புதுப்பானையிற் பாதிரிமலர்களைப்பெய்துவைத்துப் பின்பு நீரைப்பெய்தால் அந்நீர் நல்லமணத்தைப் பெறுமென அறிக. அறிவுதலைப்படுவர் - இனைவழுவமைதி; [நன் - பொது-௨௬.] புதுமையென்னும் பண்புப்பெயர், ஈறுபோய்த் தன்னொற்றிரட்டி 'புத்தோடு' என வருமொழியோடு புணர்ந்தது; [நன் - பத - ௯.] ஆங்கு - உவமவுருபாகியஇடைச்சொல். ()

௧௪௰. அலகுசால் கற்பி னறிவுநூல் கல்லா
துலகநூ லோது வதெல்லாங் - கலகல
கூஉந் துணையல்லாற் கொண்டு தடுமாற்றம்
போஒந் துணையறிவா ரில்.

(இ - ள்.) அலகு சால் - அளவு மிகுந்த, கற்பின் - வித்தைகளுள்ளே, அறிவு நூல் - தத்துவஞானத்தைத்தருகிற சாஸ்திரங்களை, கல்லாது - படியாமல், உலகம் நூல் - இவ்வுலகத்துக்கேபயன்படுகிற வேறுநூல்களை, ஓதுவது எல்லாம் - படிப்பதுமுழுவதும், கலகல கூஉம் துணை அல்லால் - கலகலவென்று கூவுமளவேயல்லாமல், கொண்டு - (அவ்வுலகநூலோதுவதைக்) கொண்டு, தடுமாற்றம் போம் துணை அறியார் - (பிறவித்துன்பங்களில்) தடுமாறுதல் நீங்குந்தன்மையை அறிபவர்கள், இல் - இல்லை; (எ - று.)

கற்பு - கல்வி; தொழிற்பெயர்: பு - விகுதி. இன் - வுருபு. 'அறிவனூலோதாது' என்ற பாடத்துக்கு-ஞானசொரூபியான கடவுளைப்பற்றிய நூல்களைப் படியாமலென்று பொருள். கலகல - அநுகரணம்; இரட்டைக்கிளவி: இங்கே, பொருளில்லாமையைக் குறித்தது. அளபெடைகள் - அசைநிறைத்தன. தடுமாற்றம் - தொழிற்பெயர்; தடுமாறு - பகுதி, தன்னொற்றிரட்டியது - விகாரம், அம் - விகுதி. கீழ்த் துறவென்னும் அதிகாரத்தில் "தொலைவில்லாச், சத்தமுஞ் சோதிடமு மென்றாங் கிவைபிதற்றும், பித்தரிற் பேதையா ரில்" என்றதிலும் இச்செய்யுளின்கருத்து இருத்தல் காண்க. அறிவுநூல் - வேதவேதாந்தங்கள். உலகநூல் - தருக்கம், வியாகரணம் முதலியன. 'அறிவுநூல்கல்லா துலகநூலோதுவது' என்றதனால், வேதாந்தநூற்பயிற்சிக்குவேண்டியஅளவுமற்றைய நூல்களையுங்கற்றல்வேண்டுமென்க. கூம், போம் - கூவும், போகும்; செய்யுமென்னெச்சத்து ஈற்றுயிர்மெய் கெட்டது. (௧௪௰)

## ௧௫ - ம் அதி.—குடிப்பிறப்பு.

அதாவது - உயர்ந்த குலத்திற் பிறத்தலினது சிறப்பைக் கூறுவது. உயர்குடியிற்பிறந்தார்க்கே பெரும்பாலும் கல்விகேள்விப்பயன்கள் அமைதலால், இது கல்வியின்பின் வைக்கப்பட்டது; அன்றியும், கல்வி ஒருவன் பிறந்தகுடியைஉயர்த்துதலை அதிகாரமுறைமைக்குக் காரணமென்னலாம்.

௧௪௧. உடுக்கையுலறி யுடம்பழிந்தக் கண்ணுங்
குடிப்பிறப் பாளர்தங் கொள்கையிற் குன்றா
ரிடுக்கண் டலைவந்தக் கண்ணு மரிமா
கொடிப்புற் கறிக்குமோ மற்று.

(இ - ள்.) உடுக்கை உலறி - உடுக்கப்படும்ஆடையுங் கெட்டு, உடம்பு அழிந்தக்கண்ணும் - (உணவில்லாமையால்) உடம்பும் மெலிந்து அழிந்தபொழுதும், குடி பிறப்பு ஆளர் - உயர்ந்தகுடியிற்பிறத்தலையுடையவர்கள், தம் கொள்கையின் குன்றார் - தமதுகுலத்துக்கு உரிய ஒழுக்கத்திற் குறைவுபடார்; (எதுபோல எனின்), இடுக்கண் தலைவந்தக்கண்ணும் - (பசியினாலாகிய) துன்பம் மிகுதியாய் உண்டானபொழுதும், அரி மா - சிங்கமாகி

ய மிருகம், கொடி புல் கறிக்குமோ - கொடியாகப்படர்ந்திருக்கும் புல்லைத் தின்னுமோ? [தின்னாது] ; (எ - று.) — ஓ - எதிர்மறை. மற்று - அசை.

மிருகேந்திரனாகிய சிங்கத்துக்குப் புல்லைத்தின்னாமைபோலச் சிறந்தவ ராகிய குடிப்பிறப்பாளர்க்கு ஒழுக்கங்குன்றாமை இயல்பென்பதாம். இதனால், புல்லைத்தின்னுதல் பசுமுதலியவற்றுக்கு இயல்பாதல்போல ஒழுக்கங் குறைதல் தாழ்குடிப்பிறந்தார்க்கு இயல்பாமென்பதும் பெறப்படும். எடுத்துக்காட் டுவமை. இரண்டுவாக்கியங்களிலுமுள்ள இழிவுசிறப்பும்மைகளால், பிறகா லங்களில் நிலைவேறுபடாமை கூறாமே குறிப்பிக்கப்பட்டது. "புலி பசித் தாலும் புல்லைத் தின்னாது," "நல்லா ரொழுக்கின் றலைநின்றார் நல்கூர்ந்தும், அல்லன செய்தற் கொருப்படார் - பல்பொறிய, செங்கட் புலியே றறப்பசி த்துந் தின்னாவாம், பைங்கட் புனத்தபைங் கூழ்" என்பன காண்க. உடுக் கை - உடுக்கப்படுவது என ஆடைக்குக் காரணப்பெயர் ; உடு - பகுதி, க் - சந்தி, கு - சாரியை, ஐ - செயப்படுபொருள்விகுதி : இதனைத் தொழிலாகு பெயரென்பாருமுளர். உலறி, உலறு - பகுதி. அழிந்தக்கண், வந்தக்கண் - கண்ணீற்று எதிர்காலவினையெச்சங்கள். பிறப்பாளர் - பிறப்பை ஆள்பவர். 'இடுக்கண் என்பது மலர்ந்தநோக்கமின்றி மையல்நோக்கம்பட வரும் இர க்கம்' என ஆசிரியர்நச்சினார்க்கினியர் கூறியிருத்தலைக்கொண்டு, இடுங்கு கண் என்பது இடுக்கண் என விகாரப்பட்டதென்றும், துன்பம் நேருங்கால த்தில் கண் இடுங்குதலால் துன்பத்திற்கு இடுக்கண் எனப்பெயரென்றும் உணர்க. அரிமா - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. (கசக)

கசஉ. சான்றாண்மை சாய லொழுக்க மிவைமூன்றும்
வான்றோய் குடிப்பிறந்தார்க் கல்லது - வான்றோயு
மைதவழ் வெற்ப படாஅ பெருஞ்செல்வ
மெய்தியக் கண்ணும் பிறர்க்கு.

(இ - ள்). வான் தோயும் - ஆகாயத்தை அளாவிய, மை தவழ் - மேகங்கள் தவழ்கின்ற, வெற்ப-மலையையுடைய அரசனே! சான்றாண்மை - நற்குணங்களால்நிறைந்திருத்தலும், சாயல் - மென்மையும், ஒழுக்கம் - நல்லொழுக்கமும், இவை மூன்றும் - இம்மூன்றும், வான் தோய் குடி பிறந் தார்க்கு அல்லது - (கீர்த்தியால்) மேலுலகத்தை அளாவிய [உயர்ந்த] குடி யிற் பிறந்தவர்களுக்கே யல்லாமல், பிறர்க்கு - மற்றையோர்க்கு, பெரு செல்வம் எய்தியக்கண்ணும் - மிகுந்த செல்வம் உண்டானபொழுதும், படாஅ - உண்டாகாவாம் ; (எ - று.)

"சாயல்மென்மை" என்னுந் தொல்காப்பியச்சூத்திரத்தால், சாயல் என்பது - ஐம்பொறிகளாலும் நுகரப்படும் பலவகைமென்மைகளையும் உண ர்த்துவதொரு உரிச்சொல்லாதலை உணர்க. வான்தோய்குடி - "வானுயர் தோற்றம்" என்றாற்போல, உயர்ந்தகுடியென்னும் பொருள்பட நின்றது. 'வான்தோயு மைதவழ் வெற்ப' என்றவிடத்து,மலைக்கும் மேகத்துக்குஞ் சம் பந்தமில்லாமலிருக்கவுஞ் சம்பந்தத்தைக் கற்பித்துக் கூறியதனால்,தொடர் புயர்வுநவிற்சியணி: வடநூலார் சம்பந்தாதிசயோக்தியென்பர்: இதனால், மலையினது உயர்வுதொனிக்கின்றது. அளபெடை-அசைநிறை. முதலடியில், பெயர்ச்செவ்வெண் ஈற்றில் தொகைபெற்றது. (கசஉ)

கசங. இருக்கை யெழலு மெதிர்செலவு மேனை
விடுப்ப வொழிதலோ டின்ன - குடிப்பிறந்தார்
குன்றா வொழுக்கமாக் கொண்டார் கயவரோ
டொன்றா வுணரற்பாற் றன்று.

(இ - ள்.) (பெரியோரைக்கண்டால்), இருக்கை எழலும்-(உடனே தமது) இருப்பிடத்தைவிட்டு எழுந்து நிற்றலும், எதிர்செலவும்-(அவர்களை) எதிர்கொண்டுசென்று அழைத்துவருதலும், ஏனை - இன்னமும், விடுப்ப ஒழிதலோடு-(அவர்கள்மீளும்பொழுது)விடைகொடுக்கத் தாம் (அவரைவிட்டுப்) பிரிதலும், இன்ன - இத்தன்மையானசெய்கைகளை, குடி பிறந்தார் - உயர்ந்தகுடியிற்பிறந்தவர்கள், குன்றா ஒழுக்கம் ஆ - (என்றும்) குறைவுபடாத [இயற்கையான] ஒழுக்கமாக, கொண்டார் - வைத்துக்கொண்டார்கள்; (ஆதலால் அவர்களை), கயவரோடு - மூடர்களுடனே, ஒன்றா ஆ - ஒருதன்மையாக, உணரல் பாற்று அன்று - மதித்தல் தக்கதன்று; (எ - று.)

ஏனை - வினைமாற்றுப்பொருளில்வந்த இடைச்சொல். ஓடு - எண்ணிடைச்சொல். இன்ன - பெயர்; இரண்டாம்வேற்றுமைத் தொகை. கயமையாவது - நற்குணங்கள்யாவும் இல்லாததன்மை; அதனையுடையவராகிய கீழோர், கயவர். 'இன்ன' என்றதனால், இவைபோன்ற மற்றும் பலநல்லொழுக்கங்களுங் கொள்ளப்படும். இவையெல்லாந் தாழ்ந்தசாதியோரிடத்து இயற்கையாக அமைந்திராவாதலால், 'கயவரோ டொன்றா வுணரற்பாற்றன்று' என்றார். பாற்று - பான்மையென்னும் பண்புப்பெயரினடியாகப்பிறந்த ஒன்றன்படர்க்கைமுற்று. (கசங)

கசச. நல்லவை செய்யி னியல்பாகுந் தீயவை
பல்லவர் தூற்றும் பழியாகு - மெல்லா
முணருங் குடிப்பிறப்பி னூதிய மென்னோ
புணரு மொருவர்க் கெனின்.

(இ - ள்.) (உயர்குடியிற்பிறந்தவர்கள்), நல்லவை செய்யின்-நல்ல காரியங்களைச் செய்வாராயின்,இயல்பு ஆகும்-(அது அவர்களுக்கு) இயற்கையென்று எண்ணப்படும் [சிறப்பாகக்கொள்ளப்படாது];தீயவை (செய்யின்)-கெட்டகாரியங்களைச் செய்தால், பல்லவர் தூற்றும் பழி ஆகும் - (அது) பலரும் எடுத்துச்சொல்லும் பழிப்புக்குக் காரணமாம்; (ஆதலால்), ஒருவர்க்கு—, புணரும் எனின் - (உயர்குடிப்பிறப்பு முன்னையநல்வினையால்) கூடினால், எல்லாம் உணரும் குடிப்பிறப்பின் - எல்லாவற்றையும் அறியவல்ல அவ்வுயர்குடியிற்பிறத்தலினால், ஊதியம்-பயன், என்னோ-யாதோ? (எ - று.)

உயர்குடிப்பிறந்தார்க்கு மிக்கநல்லொழுக்கத்தாலும் பெரும்புகழுண்டாதலில்லை; சிறியதீயொழுக்கத்தாலும் பெரும்பழி உண்டாகின்றது; தாழ்குடியிற்பிறந்தார்க்கோ இங்ஙனமில்லை; சிறிதுநல்லொழுக்கத்தாற் பெரும்புகழும் பெருந்தீயொழுக்கத்தாற் சிறுபழியும் உண்டாகின்றன; ஆதலால் உயர்குடிப்பிறந்தார்க்கு அக்குடிப்பிறப்பால் நஷ்டமேயொழிய லாபமில்லை என வஞ்சப்புகழ்ச்சி [நிந்தாஸ்துதி] வகையால் குடிப்பிறப்பின் மேன்மையை விளக்கியபடி. இனி, நல்லவைசெய்தலை இயல்பாகவும் தீயவைசெய்தலைப் பலருந்தூற்றும்பழியாகவுங்கொண்டு யாவராலும் அறிந்துநன்குமதிக்கப்படுகிற உயர்குடிப்பிறப்பு ஒருவர்க்குக்கூடுமாயின் அதனினும் இலாபம் வேறியாதோ? [எதுவுமில்லை] என்று உரைப்பினும் அமையும். வெள்ளாடைக்கு மாசு படிதல்போல உயர்ந்தோர்க்குப் பழியுண்டாவது எளிதாம்; "ஒன்றாய் விடினு முயர்ந்தார்ப் படுங்குற்றங், குன்றின்மேலிட்ட விளக்கு" என்பது காண்க. என்னோ, ஓ - அசை. (கசச)

**கசரு. கல்லாமை யச்சங் கயவர் தொழிலச்சஞ்**
**சொல்லாமை யுள்ளுமோர் சோர்வச்ச - மெல்லா**

இரப்பார்க்கொன் றீயாமை யச்ச மரத்தாரிம்
மாணாக் குடிப் பிறந்தார்.

(இ - ள்.) கல்லாமை அச்சம்-தாம் படியாமைக்கு அஞ்சுதலும், கயவர் தொழில் அச்சம் - கீழோர்செய்யும் இழிதொழில்களைச் செய்தற்கு அஞ்சுதலும், சொல்லாமையுள்ளும் ஓர் சோர்வு அச்சம்-(பொய் கோள் கடுஞ்சொல் பயனில்சொல் என்னுந் தீச் சொற்களைச்) சொல்லாமலிருப்பதிலும் (எந்த இடத்தில் தவறிப்போமோ என்று) ஒரு தளர்ச்சிக்கு அஞ்சுதலும், எல்லாம் இரப்பார்க்கு ஒன்று ஈயாமை அச்சம் - (தமக்குவேண்டுவன) பலவற்றை இரப்பவர்களுக்கு (அப்பொருள்கள்பலவற்றுள்) யாதாயினுமொன்றைக் கொடுக்கக்கூடாமைக்கு அஞ்சுதலும், (இத்தன்மையான பல அச்சங்கள் உயர்குடிப்பிறந்தோர்க்கே உள்ளன);(ஆதலால்), இ மாணா குடி பிறந்தார் - மாட்சிமைப்படாத இவ்வுயர்குடியிற்பிறந்தவர்கள், மரத்தார் - மரக்கலத்திலுள்ளார்போல எப்பொழுதும் அச்சமுடையார் ; (எ-று.)

இதுவும், புகழாப்புகழ்ச்சியாகக் குடிப்பிறப்பின்மேன்மையைத் தெரிவித்தபடி. மரக்கலமென்பது-சிலவிடங்களிற் கலமெனநிற்றல்போல, இங்கே மரமென விகாரப்பட்டு நின்றது ; இனி, மரமென்பதை - அதனாலாகிய தோணிக்குக் கருவியாகுபெயரெனக் கொள்ளலுமாம். "ஒன்றானுந் தீச் சொற் பொருட்பய னுண்டாயின், நன்றாகா தாகி விடும்" ஆதலால், 'சொல்லாமையுள்ளு மோர்சோர்வச்சம்' எனப்பட்டது. தம்மிடத்து உள்ளதையெல்லாங்கொடுத்து இல்லாததைக்குறித்து இரங்குவதென்பார், 'எல்லாமிரப்பார்க்கு ஒன்று ஈயாமை அச்சம்' என்றார். உயர்குடியை 'மாணாக்குடி' என்றது, எப்பொழுதும் பல அச்சத்திற்கு இடமாயிருத்தல் பற்றி ; இனி, ஆகாரத்தை 'இல்லாப்பொருள்' என்பதிற்போலச் சாரியையாக்கி, மாண் குடி-மாட்சிமைப்பட்ட குடி எனலும் அமையும்: அன்றியும், மாண் ஆ குடி எனப்பிரித்து - மாட்சிமையாதலையுடைய குடியென்றும உரைக்கலாம். இனி, மாணாக்குடிப்பிறந்தார் - மாட்சிமையில்லாத தாழ்ந்தகுடியிற்பிறந்தவர்கள், மரத்தார் - (இப்படிப்பட்ட அச்சத்திற்குக் காரணமான உணர்ச்சி சிறிதும் இல்லாமையால்) மரத்தோடொப்பர் என்றும் உரைத்தல் கூடும். மரத்தார் - மரத்தினாற்செய்தபாவைபோன்றவ ரென்றுமாம். (கசரு)

கசசு. இனநன்மை யின்சொலொன் றீதன் மற்றேனை
மனநன்மை யென்றிவை யெல்லாங் - கனமணி
முத்தோ டிமைக்கு முழங்குவரித் தண்சேர்ப்ப
விற்பிறந்தார் கண்ணே யுள.

(இ - ள்.) கனம் - சிறந்த, மணி - இரத்தினங்கள், முத்தோடு - முத்துக்களுடனே, இமைக்கும் - பிரகாசிக்கின்ற, முழங்கு உவரி - ஆரவாரிக்கின்ற கடலினது, தண் சேர்ப்ப - குளிர்ச்சியான கரையையுடையவனே ! இனம் நன்மை - நல்ல சினேகிதரை யுடைத்தாயிருத்தலும், இன் சொல் - இனிய சொற்களைச் சொல்லுதலும், ஒன்று ஈதல் - யாசித்ததொரு பொருளை (யாசகர்க்குக்) கொடுத்தலும், ஏனை மனம் நன்மை - மற்றும் மனத்தினது தூய்மையும், என்ற இவை எல்லாம் - என்றுசொல்லப்பட்ட இந்நற்குணங்களெல்லாம், இல் பிறந்தார்கண்ணே - உயர்குடியிற்பிறந்தவரிடத்தே, உள-(இயல்பாக) உள்ளன ; (எ - று.)

'இற்பிறந்தார்கண்ணே' என்னும் பிரிநிலை ஏகாரத்தால், தாழ்குடிப் பிறந்தாரிடத்து இவை இல வென்பது பெறப்படும். மற்று - அசை. என்றி

வை - பெயரெச்சவிகாரம்; இனி, என்று இவை எனப்பிரித்து, எண்ணிடைச்சொல்லாகக்கொண்டு, பிறவிடத்துங் கூட்டி உரைத்தலும் ஒன்று. 'ரத்நாகரம்' என்னும் வடமொழிப்பெயரின் பொருள் விளங்க, 'கனமணி முத்தோ டிமைக்கு முவரி' எனப்பட்டது; இனி, மணி என்பதற்கு - அழகென்றுபொருள்கொண்டு அதனை முத்துக்கு அடைமொழியாக்கியும் உரைப்பர். உவரி - உவர்ப்புச்சுவையுடையது; உவர் - உப்பு, இ - பெயர்விகுதி.

கருஎ. செய்கை யழிந்து சிதன்மண்டிற் றாயினும்
பெய்யா வொருசிறை பேரி லுடைத்தாகு
மெய்வ முழந்தக் கடைத்துங் குடிப்பிறந்தார்
செய்வர் செயற்பா லவை.

(இ - ள்.) பேர் இல் - பெரிய வீடாயிருந்தால் அது, செய்கை அழிந்து - கட்டுக்குலைந்து, சிதல் மண்டிற்று ஆயினும் - செல்லால் அரிக்கப்பட்டதானாலும், பெய்யா ஒரு சிறை உடைத்து ஆகும் - (மழைநீர்) உள்ளே ஒழுகாத ஒருபக்கத்தை யுடையதாம்; (அதுபோல), குடி பிறந்தார் - உயர்குடியிற்பிறந்தவர், எவ்வம் உழந்தக்கடைத்தும் - (வறுமை நோய் முதலியவற்றால்) துன்பமனுபவிக்கும் பொழுதும், செயற்பாலவை - தாம் செய்தற்குரிய கடமைகளை, செய்வர் - (விடாமற்) செய்வார்கள்; (எ-று.)

எடுத்துக்காட்டுவமை. சிதல் - கறையான். உழந்தக்கடைத்து-கடைத்துஎன்னும்விகுதி பெற்றுவந்த எதிர்காலவினையெச்சம்; இதில், கடை - விகுதி, து - சாரியை எனினும் இழுக்காது. (கருஎ)

கருஅ. ஒருபுடை பாம்பு கொளினு மொருபுடை
யங்கண்மா ஞாலம் விளக்குறூஉந் - திங்கள்போற்
செல்லாமை செவ்வனேர் நிற்பினு மொப்புரவிற்
கொல்கார் குடிப்பிறந் தார்.

(இ - ள்.) ஒரு புடை - (தனது) ஒருபாகம், பாம்பு கொளினும் - பாம்பினாற் பிடிக்கப்பட்டிருந்தாலும், ஒரு புடை - மற்றொருபாகத்தால், அம் கண் மா ஞாலம் - அழகிய இடத்தையுடைய பெரிய பூமியை, விளக்குறூஉம் - பிரகாசிப்பிக்கின்ற, திங்கள்போல் - பூர்ணசந்திரனைப்போல, குடி பிறந்தார் - உயர்குடிப்பிறந்தவர்கள், செல்லாமை - வறுமை, செவ்வன் நேர் நிற்பினும் - நன்றாகத் தம்மிடம் நேர்ந்திருந்தாலும், ஒப்புரவிற்கு - (பிறர்க்கு) உபகாரஞ்செய்வதற்கு, ஒல்கார் - தளரார்; (எ - று.)

கிரகணகாலங்களிற் சந்திரனைமறைக்கின்ற பூமியினது சாயையை இராகுகேதுக்களென்னுங் கரும்பாம்புசெம்பாம்புகளாகக் கூறுகிற புராணநூல்வழக்குப்பற்றி, இங்ஙனங் கூறியது. விளக்குறூஉம் என்னும் பெயரெச்சத்தில், விளங்கு என்பதன் பிறவினையாகிய விளக்கு - பகுதி, உறு - துணைவினை, உம் - காலங்காட்டும்விகுதி; அளபெடை - இன்னிசை. செல்லாமை - எண்ணமும் சொல்லும் தொழிலும்ஆகிய திரிகரணங்களின் செயல்கள் சித்திபெறாமை; எனவே, வறுமையாம். செவ்வன் - பண்புப்பெயர்; அன் - விகுதி. நேர்—'நேர்ந்து' என்னும் வினையெச்சத்தின் விகாரம். ஒப்புரவு - உலகநடையை அறிந்துசெய்யும் உதவி. ஒல்கார், ஒல்கு - பகுதி. (கருஅ)

கருகூ. செல்லா விடத்துங் குடிப்பிறந்தார் செய்வன
செல்லிடத்துஞ் செய்யார் சிறியவர் - புல்வாய்

பருமம் பொறுப்பினும் பாய்பரி மாபோற்
பொருமுரண் ணாற்றுத லின்று.

(இ - ள்.) செல்லா இடத்தும் - (வறுமைமுதலியவற்றால்) செய்ய முடியாதகாலத்திலும், குடிபிறந்தார் - உயர்குடிப்பிறந்தவர், செய்வன - செய்யும் நற்கருமங்களை, சிறியவர் - தாழ்குடிப்பிறந்தவர், செல்இடத்தும் - (செல்வமுதலியவற்றால்) செய்யக்கூடியகாலத்திலும், செய்யார் - செய்யமாட்டார்கள்; புல்வாய்-மானானது, பருமம் பொறுப்பினும் - சேணம் முதலிய போர்க்கோலத்தைத் தாங்கினாலும், பாய் பரிமா போல் - (இயற்கையாகப்) பாய்ந்தோடுந்தன்மையையுடைய குதிரைபோல, பொரு முரண் ஆற்றுதல் இன்று - போர்செய்யுந்தன்மையையுடைத்தாதலில்லை; (எ - று.)

திருஷ்டாந்தாலங்காரம். புல்வாய் - புல்லைத்தின்னும்வாயையுடையது என மானுக்குக் காரணப்பெயர்; வேற்றுமைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. பருமம் - குதிரைமேற்றவிசு. பருமம் பொறுப்பினும் - பருத்திருத்தலை யுடைத்தாயிருந்தாலும் என்றுமாம். பிறவற்றைக்கூறாது புல்வாயையும் பரிமாவையுங் கூறியது, இரண்டுக்கும் மாவென்று ஒரு பெயர் பொதுவாக உள்ளதனால்; அன்றியும், ஒருவகைமான் குதிரை போலப் பருத்திருக்கின்றது. 'பெருமுரண்' எனவும்பாடம். (௧௪௯)

௧௫௦. எற்றொன்று மில்லா விடத்துங் குடிப்பிறந்தா
ரற்றுத்தற் சேர்ந்தார்க் கசைவிடத் தூற்றாவ
ரற்றாக் கடைத்து மகல்யா றகழ்ந்தக்காற்
றெற்றெனத் தெண்ணீர் படும்.

(இ - ள்.) குடிப்பிறந்தார்—, எற்று ஒன்றும் இல்லா இடத்தும் - யாதொருபொருளுமில்லாதகாலத்தும், அற்று தன் சேர்ந்தார்க்கு - வேறுகதியில்லாமல் தன்னை அடைந்தவர்களுக்கு, அசைவு இடத்து ஊற்று ஆவர் - தளர்ச்சி நேர்ந்தவிடத்து ஊன்றுகோல்போல உதவுவர்; (எதுபோல எனின்), அகல் யாறு - பெரியநதியானது, அற்றக்கடைத்தும் - நீர்வற்றியபொழுதும், அகழ்ந்தக்கால் - தன்னைத்தோண்டினால், தெற்றென - விரைவாக, தெள் நீர் படும் - தெளிவானநீர் உண்டாகப்பெறும்; (எ - று.)

இதுவும், திருஷ்டாந்தாலங்காரம். ஆறானது வெள்ளமுள்ள காலத்துத் தன்னை எவருந் தோண்டுதல் வேண்டாமலே தானே எங்குஞ் சென்று நீரை உதவி நீர்வறண்டகாலத்திலே தோண்டினமாத்திரத்தில் நீரை உதவுதல்போலக் குடிப்பிறந்தார் செல்வமுள்ள காலத்தே எவருந் தம்மைச் சேர்ந்துயாசிக்கவேண்டாமலே தாமே எங்குஞ் சென்று உதவிகள்செய்து செல்வமில்லாதகாலத்திலே தம்மையடைந்தமாத்திரத்தில் உதவிசெய்வர் என்பதாம். "ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ், வாற்றுப் பெருக்கா லுலகூட்டு - மேற்றவர்க்கு, நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ராலுமு, மில்லையென மாட்டா ரிசைந்து" என்பதனோடு இதனை ஒப்பிடுக. எற்று - வினாவடியாகப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும்பெயர். இல்லா, ஆ - சாரியை. தற் சேர்ந்தார் - ஒருமைப்பன்மைமயக்கம்; தனித்தனி இவ்வாறுவ ரென்பது கருத்து. தெற்றென - விரைவுக்குறிப்பு. 'தண்ணீர் படும்' என்றபாடத்துக்கு, தெற்றென - தெளிவாக என்க. (௧௫௦)

# யாப்பிலக்கணச் சுருக்கம்.

**யாப்பாவது**—பலசொற்களாலும் பொருளுக்கு இடமாகக் கற்றுவல்ல புலவர்களால் அணிபெறப் பாடப்படுவது.

இதற்கு - எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என உறுப்புஆறும்.

**எழுத்தாவது**—நன்னூல் முதலியவற்றுட் கூறப்பட்ட அக்ஷரங்கள்.

**அசையாவது**—எழுத்தினாலாக்கப்பட்டுச் சீருக்குஉறுப்பாய் வருவது.

அது - நேரசை, நிரையசை என இருவகையாம்.

**நேரசையாவது**—ஒரு குறிலாவது நெடிலாவது தனித்தாயினும் ஒற்றடுத்தாயினும் வருவது.

(உ-ம்.) 'ஆழி' என்பதில்முறையே நெடிலுங் குறிலுந் தனித்தும், 'சொல்வான்' என்பதில் முறையே குறிலும் நெடிலும் ஒற்றடுத்தும் நேரசையாயின. அ ஆ என்பதுபோல விட்டிசைத்தாலல்லது தனிக்குறில் முதலில் நேரசையாகாது.

**நிரையசையாவது**—குறிலிணையாவது குறில்நெடிலாவது தனித்தாயினும் ஒற்றடுத்தாயினும் வருவது.

(உ-ம்.) 'அணி' - குறிலிணை தனித்தும், 'கலம்' - குறிலிணை ஒற்றடுத்தும், 'நிலா' - குறில்நெடில் தனித்தும், 'படாம்'-குறில்நெடில் ஒற்றடுத்தும் நிரையசையாயின.

**சீராவது**—அவ்வசைகள் சிறுபான்மை தனித்தும், பெரும்பான்மை இரண்டுமுதலாகத் தொடர்ந்தும் வருவது.

அது-ஓரசைச்சீர், ஈரசைச்சீர், மூவசைச்சீர், நாலசைச்சீர் என நான்காம்.

**ஓரசைச்சீராவது**—நேரசையாயினும் நிரையசையாயினுந் தனித்து நின்று சீராய்வருவது. உதாரணவாய்பாடு: நேர்—நாள்; நிரை—மலர். இவைபெரும்பாலும்வெண்பாவினீற்றில்வரும். இவற்றைஅசைச்சீர்என்பர்.

**ஈரசைச்சீராவது**—நேர்நேர், நிரைநேர், நிரைநிரை, நேர்நிரை என இரண்டசை கூடிவரும் இந்நான்குமாம்.

| | | | |
|---|---|---|---|
| (உ-ம்.) நேர்நேர்—தேமா<br>நிரைநேர்—புளிமா | இவை மாச்சீர். | நிரைநிரை—கருவிளம்<br>நேர்நிரை—கூவிளம் | இவை விளச்சீர். |

இவை - இயற்சீர்எனவும், அகவற்சீர்எனவும், ஆசிரியவுரிச்சீர்எனவும்படும்.

**மூவசைச்சீராவது**—மேற்சொல்லப்பட்ட ஈரசைச்சீர் நான்கின் இறுதியிலும் நேரசையும்நிரையசையுந் தனித்தனி கூடிவருதலாலாகிய எட்டாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| (உ-ம்.) | நேர்நேர்நேர் -தேமாங்காய்<br>நிரைநேர்நேர் -புளிமாங்காய்<br>நிரைநிரைநேர்-கருவிளங்காய்<br>நேர்நிரைநேர் -கூவிளங்காய் | காய்ச்சீர் | நேர்நேர்நிரை -தேமாங்கனி<br>நிரைநேர்நிரை -புளிமாங்கனி<br>நிரைநிரைநிரை -கருவிளங்கனி<br>நேர்நிரைநிரை -கூவிளங்கனி | கனிச்சீர் |

இவை - உரிச்சீர்எனவும், இவற்றுள் காய்ச்சீர்கள்-வெண்சீர் எனவும் கனிச்சீர்கள் - வஞ்சிச்சீர் எனவும் படும்.

**நாலசைச்சீராவது**—அம்மூவசைச்சீர் எட்டின் இறுதியிலும் நேரும் நிரையுந் தனித்தனி அடுத்து வருதலாலாகிய பதினாறுமாம். (உ-ம்.)

| | |
|---|---|
| நேர்நேர்நேர்நேர் - தேமாந்தண்பூ | நேர்நேர்நேர்நிரை-தேமாந்தண்ணிழல் |
| நிரைநேர்நேர்நேர் - புளிமாந்தண்பூ | நிரைநேர்நேர்நிரை - புளிமாதண்ணிழல் |
| நிரைநிரைநேர்நேர்-கருவிளந்தண்பூ | நிரைநிரைநேர்நிரை-கருவிளநன்னிழல் |
| நேர்நிரைநேர்நேர் - கூவிளந்தண்பூ | நேர்நிரைநேர்நிரை-கூவிளநன்னிழல் |
| நேர்நேர்நிரைநேர் - தேமாநறும்பூ | நேர்நேர்நிரைநிரை-தேமாநறுநிழல் |
| நிரைநேர்நிரைநேர் - புளிமாநறும்பூ | நிரைநேர்நிரைநிரை-புளிமாநறுநிழல் |
| நிரைநிரைநிரைநேர்-கருவிளநறும்பூ | நிரைநிரைநிரைநிரை-கருவிளநறுநிழல் |
| நேர்நிரைநிரைநேர் - கூவிளநறும்பூ | நேர்நிரைநிரைநிரை -கூவிளநறுநிழல். |

**தளையாவது**—நின்றசீரின் ஈற்றசையோடு வருஞ்சீரின் முதலசை ஒன்றியாயினும் ஒன்றாமலாயினுங் கூடிநிற்பது. ஒன்றுதலாவது-நேர் முன் நேரும், நிரைமுன்நிரையும் வருவது. ஒன்றாமையாவது-நேர்முன்நிரையும், நிரைமுன்நேரும் வருவது.

அத்தளை-நேரொன்றாசிரியத்தளை, நிரையொன்றாசிரியத்தளை, வெண்சீர்வெண்டளை, இயற்சீர்வெண்டளை, ஒன்றியவஞ்சித்தளை, ஒன்றாவஞ்சித்தளை, கலித்தளை என எழுவகைப்படும்.

நேரொன்றாசிரியத்தளை-மாமுன்நேர்வருவது;நாள்முன்நேர்வருவதுமது.

நிரையொன்றாசிரியத்தளை - விளமுன் நிரை வருவது; மலர்முன் நிரை வருவதும் அது.

வெண்சீர்வெண்டளை-காய்முன்நேர்வருவது; பூமுன்நேர்வருவதுமது.

இயற்சீர்வெண்டளை-மாமுன்நிரையும், விளமுன்நேரும்வருவன; நாள்முன் நிரை வருவதும், மலர்முன் நேர் வருவதும் அது.

ஒன்றியவஞ்சித்தளை - கனிமுன்நிரைவருவது; நிழல்முன் நிரைவருவதும் அது.

ஒன்றாவஞ்சித்தளை-கனிமுன் நேர்வருவது;நிழல்முன்நேர்வருவதுமது.

கலித்தளை - காய்முன்நிரைவருவது; பூமுன்நிரைவருவதும் அது.

**அடியாவது**—மேற்சொல்லியதளைகள்ஒன்றும்பலவும் அடுத்துவருவது.

அவ்வடி-குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி என ஐந்து வகைப்படும். குறளடி - இருசீராலும், சிந்தடி - முச்சீராலும், அளவடி - நாற்சீராலும், நெடிலடி-ஐஞ்சீராலும், கழிநெடிலடி-ஆறு முதலிய சீர்களாலும் வருவன.

**தொடையாவது**—பலஅடிகளிலாயினும் பலசீர்களிலாயினும் எழுத்துகள் ஒன்றிவரத் தொடுப்பது.

அது - மோனை, இயைபு, எதுகை, முரண், அளபு என்பவற்றால் ஐந்து வகைப்படும்

**மோனைத்தொடையாவது**—முதலெழுத்து ஒற்றுமைப்பட்டுவரத் தொடுப்பது. அ ஆ ஐ ஔ, இ ஈ எ ஏ, உ ஊ ஒ ஓ, ஞ ந, ச த, ம வ இவை ஒன்றற்கொன்று மோனையாய் வருதலும் உண்டு. சிறுபான்மை இனவெழுத்துக்களும் மோனையாம்.

**இயைபுத்தொடையாவது**—ஈற்றெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது.

**எதுகைத்தொடையாவது**—அடிதோறும் முதலெழுத்து அளவொத்து நிற்க இரண்டு முதலிய எழுத்துக்கள் ஒன்றிவரத் தொடுப்பது.

**முரண்தொடையாவது**—சொல்லாலும் பொருளாலும் மறுதலைப்படத் தொடுப்பது.

**அளபுத்தொடையாவது**—உயிரளபெடையாயினும் ஒற்றளபெடையாயினும் ஒன்றிவரத் தொடுப்பது.

இவ்வுறுப்புக்களைப்பெற்றுவருகிற பா - வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என நால்வகைப்படும், இப்பா ஒவ்வொன்றுக்கும்-துறை, தாழிசை, விருத்தம் என இனங்கள் மூன்று உண்டு. இவற்றுள்,

**வெண்பாவினிலக்கணம்**—தனியேகூறப்படும்.

**ஆசிரியவிருத்தமாவது**-அளவுஒத்த கழிநெடிலடி நான்கினால் வருவது.

**கலித்துறையாவது**—அளவொத்த நெடிலடி நான்கால் வருவது.

**கலிவிருத்தமாவது**—அளவொத்த அளவடி நான்கால் வருவது.

இவை·பாரதத்தில் ஆங்காங்குக் காட்டப்பட்டுள்ளன காண்க.

---

## வெண்பாவிலக்கணம்.

நேரிசைவெண்பாவாவது - நான்குஅடிகளாய், ஈற்றடி முச்சீரடியாகவும் மற்றையடிகள் நாற்சீரடிகளாகவும் பெற்று, காய்ச்சீரும் மாச்சீர் விளச்சீர்களும் வெண்சீர் வெண்டளையும் இயற்சீர் வெண்டளையுங் கொண்டு, மற்றைச் சீருந் தளையும் பெறாமல், இரண்டாமடியின் இறுதிச்சீர் முதலிரண்டடிகளின் எதுகைக்கேற்ற தனிச்சொல்லாய்ப் பொருந்த, காசு பிறப்பு நாள் மலர் என்னும் வாய்பாடுகளுள் ஒன்றால் முடிந்து, ஒருவிகற்பத்தாலாயினும் இருவிகற்பத்தாலாயினும் வருவது. [வெண்சீர் வெண்டளையாவது - காய்முன் நேர் வருவது; இயற்சீர்வெண்டளையாவது-மாமுன் நிரையும், விளமுன் நேரும் வருவது: "காய்முன் நேரும் மாமுன் நிரையும், விளமுன் நேரும் வருவது வெண்டளை." ஒருவிகற்பமாவது - நான்கடியும் ஒரு எதுகையாய் வருவது; இருவிகற்பமாவது - முன் இரண்டுஅடியும் ஒரு எதுகையும், பின் இரண்டு அடியும் ஒரு எதுகையுமாய் வருவது.]

இன்னிசைவெண்பா - இவ்வாறே தனிச்சொல் இன்றி வருவது; தனிச்சொல்பெற்றாலும் மூன்றுவிகற்பத்தால் வரின், இன்னிசைவெண்பாவாம்.

நாலடியாரில் இன்னிசைவெண்பா—௧௦௩, ௧௦௪, ௧௦௫, ௧௦௯, ௧௧௦, ௧௧௪, ௧௧௫, ௧௩௨, ௧௩௩, ௧௩௪, ௧௩௭, ௧௪௧, ௧௪௭, ௧௫௦.

மற்றவை யெல்லாம் நேரிசைவெண்பாவாம்.

---

# அநுபந்தம்.

## மகாபாரதம்.

### அருச்சுனன் தவநிலைச்சருக்கம்.

௮ - ம் பாட்டில், வேறுதும் என எடுத்து, வெல்வோம் என்றும் பொருள்கொள்ளலாம்; இடையிலுள்ள து - சாரியை: றகரமாத் திரிந்தது.

௩௭ - ம் பாட்டில், 'சிலர்க்குப்பேசலாமோ' என்றவிடத்து இழிவுசிறப்பும்மை தொக்கதாக்கொண்டு, சிலருக்காயினுஞ்சொல்லமுடியுமோ வென்றும் உரைக்கலாம். 'சிலர்க்கும்' என்றும் பாடங்கொள்ளலாம்.

௩௮ - ம் பாட்டில், விசும்பிறேடும் கதிரவனை கவர்வான்போல் என்பதற்கு - ஆகாயத்துடனே சூரியனைப் பிடித்தல்போல எனவும் உரைகூறலாம்.

௮௪ - ம் பாட்டில், முன் - முன்காலத்தில் எனினுமாம்.

௧௧௦ - ம் பாட்டில், உயர் தாழ்வரைகள் ஒத்த கடிதடம்-ஓங்கிய மலையடிகளை ஒத்துள்ள இடையின்பின்புறம் என்று உரைத்தலும் ஒன்று.

௧௧௪ - ம் பாட்டில், செய்ய சிவவேடன் - (இயற்கையிலே) செந்நிறமுடைய சிவனாகிய வேடன் எனவுமாம்.

## நாலடியார்.

௯௮ - ம் பாட்டில், நெறி ஆ போல் உருவு பல கொளல் - தருமமார்க்கங்களைப் பசுக்களைப்போலப் பலஉருவமாகக் கொள்க எனவுமாம்; கொளல்-அல்லீற்று உடன்பாட்டு வியங்கோள் வினைமுற்று: தொழிற்பெயரன்று.

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| | | **மகாபாரதம்.** | |
| ௩ | ௪௧ | னுகுபம் ... .. | னுருபும் |
| ௫ | ௩0 | தியஞதியர் ... ... | தஞதியர் |
| ௬ | ௧௩ | மூனி ... ... | மூனி |
| ௧0 | ௨ | ஏற்றிய ... ... | யேற்றிய |
| ” | ” | குலேசனே ... ... | குலேசனைக் |
| ௧௪ | ௬ | பெயரீ ... ... | பெயர் |
| ௧௮ | ௧௭ | யுதிட்டரனை ... ... | யுதிட்டிரனை |
| ௨௩ | ௪௧ | திருவவரி ... ... | திருவவதரி |
| ௨௫ | ௩௯ | ச்ரவா ... ... | ச்ரவாஃ |
| ௨௯ | ௪௨ | வருச்சுனுக்கு ... ... | வருச்சுனனுக்கு |
| ௪௨ | ௩ | படுளது ... ... | படுவது |
| ௪௬ | ௧௪ | ணவே ... ... | றனவே |
| ௬0 | ௨௨ | ல்வ்வியன் ... ... | லவ்வியன் |
| ௬௫ | ௨ | மொய்ம்பிஞெடு ... | மூன்பிஞெடு |
| ௬௮ | ௨௪ | யீரிணடா ... ... | யீரிரண்டா |
| ௭௫ | ௧௮ | வம்புரி ... ... | தவம்புரி |
| ௯௯ | ௬ | உயக்கும் ... ... | உய்க்கும் |
| | | **நாலடியார்.** | |
| ௯ | ௧௪ | ருளிர்ந்த ... ... | குளிர்ந்த |

# V I L L I P U T T U R E R.

" *Villiputturer* was born of a Braman family, of the Vishnava sect at Saniyur,in the Coimbatore country,in the fifth century of the Christian era." Ho must not, however, be confounded with his name-sake, "one of the Azahvars or special votaries of Vishnu. Having refused to give his brother his share of inheritance from the paternal estate, the brother applied to the king for justice against him;but the king without pronouncing any judgment on the matter, directly sent for him and requested him to imitate in Tamil,the Mahabharat. On the day the work was finshed and recited in the royal presence, his brother by desire of the king,repeated his complaint. The king thereupon feigning to be angry looked fiercely at the poet and asked him "Oh! is this the perception of the great man who worte the Mahabharat? The king's question struck his mind with shame, for the subject of the Mahabharat is the feud which originated in the eldor refusing to give the younger his paternal share of inheritance and he thereupon delivered up the whole of the patrimony to his brother and retiring to Serangom spent the remainder of his life in devotional exercise. His imitation of the Mahabharat includes only the first ten parvams or books of that work and consists of3373Stanzas.It is decidedly a masterpiece for scarcely any Tamil epics except perhaps *Kamber's Ramayanam* can use with it either in "rivida visammi" or charms of language and Versification.

# N A L A D I Y A R.

## Pazhamozhi and Araneriehcharam.

Eight thousand Richis of a certain religious sect worte a stanza each on moral subjects and delivered them to one of the Pandiyan Kings. There were a large number of stanzas on the same subjects,and therefore the king, with a view to select those which were distinct from the rest and to reduce the size of the volume, asked the Rishis to settle as to the manner in which the selection was to be made. They proposed to drop the cadjans containing the stanzns into the river Vaigay, and to approve of those stanzas which were written on such cadjans as floated on the river in a direction opposite to the current.

Some of these containing four-hundred stanzas were taken up from the surface of the stream and were colleted into the work called Naladi; another group were found to have floated in equal portions,to the opposite banks. These formed the book Pazhamozhi. A third series drifted to the bank near the mouth of the river and were collected in thebooks Araneriehcharam.

It is here necessary to add that all the above accounts of authors are based on tradition alone.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# நா ல டி யா ர்.

நான்கென்னும் வளாயறைப் பண்புப்பெயர்: தளையால் அடுக்கப் படுவ தென்னும் பொருளில் அடு பகுதி, இ செயப்படு பொருண்மை விகுதி, உகரக் கேடு சந்தி இம்மூன்றுறுப்பால் முடிந்து நின்ற அடி என்னுங் காரணப்பெய ர்;ஆகிய இரண்டுசொல், பண்புத்தொகைநிலைத்தொடராகிய ஒருசந்திபெற்ற நாலடிஎன்பது பாக்களுள் முதன்மைபெற்ற வெண்பாவுக்குப் பண்புத்தொ கைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயராயிற்று. முத ற்பா ஆதல்பற்றிஇப்பாவை அந்தணர்சாதி என்பர். வெண்பாப்பலவற்றுளஞ

ம்குறள்வெண்பா இரண்டடியாயும், சிந்தியல் வெண்பா மூன்றடியாயும், பஃறொடைவெண்பா நான்கின்மிக்க பலவடியாயும் வருதலாலும், சவலைவெண்பா நான்கடியாய் வருவதாயினும் இலக்கியங்களுள் பயின்றுவருவதன்றாதலாலும், இங்கு வெண்பா என்றது நேரிசை இன்னிசை வெண்பாக்களை எனக் கொள்க. இருசொற்றொக்கு ஒருமொழிபோல நின்ற இந்நாலடி என்னும் பெயர் வெண்பாவின் தொகுதியாகிய நூலுக்குச்சினையாகு பெயராயிற்று. அவ்வெண்பாதன்னாலாகிய நூலுக்காதலால் கருவியாகுபெயராமெனினும் பொருந்தும். புறவுரைச்செய்யுளைச் சிறப்புப்பற்றி, உயர்திணை ஆண்பாற் படர்க்கை விகுதிபுணர்த்துத் தனியனென வழங்கல் போலச்சிறப்புப்பற்றி உயர்திணைப் பல்லோர்படர்க்கை விகுதி புணர்த்து நாலடியாரென வழங்கலாயிற்று. திருக்கோவையாரென்பதும் இது. இந்நூல் நாலடி நானூறெனவும் வழங்கும். இது பால், அதிகாரம், செய்யுள் என மூன்றுறுப்படக்கிய பிண்டமெனப்படும். இது இலக்கணநூற்குப் பொருந்துமே அன்றிப்பழையதோர் கதையின் மேற் செல்லு நூலுக்குப் பொருந்தாது. அது தோலெனப்படும். இது இலக்கணநூலாமாறு எங்ஙனமெனின் அறம்பொருள் இன்பங்களினிலக்கண மும், அவற்றின் பாகுபாட்டி னிலக்கணமுங் கூறுதலாலெனக. இப்பெற்றியறியாதார் பழையதோர் கதையின்மேற் செல்லு நூலுக்கு இவ்விலக்கணத்தைமயங்கி ஏற்றிக் கூறுவர்.

## ௨௧ - ஆம், அதிகாரம் சுற்றந்தழால்.

அஃதாவது உறவினரை நீங்காதவகைத் தழுவுதலை யுணர்த்துவது. சுற்றமென்பது பிறப்பு முறையாலாகிய இயற்கை நட்பினரையும், முன்செய்த உதவிபற்றி வரும்செய்கை நட்பினரையும். மேற்கூறிய தாளாண்மையிற் கிடைத்த பொருளைப்பெற்றதனால் பெறும்பயன் இதுவாதலால் தாளாண்மையின் பின்வைக்கப்பட்டது. தழாலென்பதில் ஆல்புடை பெயர்ச்சி விகுதி.

வயாவும் வருத்தமு மீன்றக்கா னோவும்
கவாஅன் மகற்கண்டு தாய்மறந் தாஅங்
கசாஅத்தா னுற்ற வருத்த முசாஅத்தன்
கேளிரைக் காணக் கெடும்.

(இ - ள்.) தாய் - தாயானவள், வயாவும் - கருவினாலடைந்த வருத்தத்தையும், வருத்தமும் - (பெறுங்காலத்தடைந்த) வருத்தத்தையும், ஈன்றக்கால் நோவும் - பெற்றபின் (அடைந்த) வருத்தத்தையும், கவான் - தன்றொடையின் மேலுள்ள, மகன்கண்டு - புத்திரனைக் காணாநின்று, மறந்தால் ஆங்கு — மறந்தாற்போல, அசா - (முயற்சி முடியாமையாலாகிய) தளர்ச்சியால், தான் உற்ற - (ஒருவன்) தான் அடைந்த, வருத்தம் - வருத்தமானது, உசா- ஆராய்தலில் மிக்க, தன்கேளிரை - தன் உறவினரை, காண - காணுதலால், கெடும் - நீங்குவான் எ - று.

உசா ஆராய்தலாகிய குறிப்புணர்த்தும் உரிச்சொல்; "உசாவேசூழ்ச்சி" என்பதனாலுமுணர்க. வயா கருப்பம், அது தன்னாலாம் வருத்தத்துக் காரணமையால் காரணவாகுபெயர். தான்வருத்தங்கெடுமென்பது திணை வழுவமைதி. கேளிர் பண்படியாகப் [illegible]றந்த பல்லோர் படர்க்கைப்பெயர், கேள்பகுதி, இர்பல்லோர் படர்க்கை விகுதி, இவ்விகுதி புத்தேளிர், மகளிர் என்பனவற்றிலுங் காண்க.

ஆழன்மண்டு போழ்தி னடைந்தவர்கட் கெல்லாம்
நிழன்மரம்போ னேரொப்பத் தாங்கிப்—பழுமரம்போல்

பல்லார் பயன்துய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன்.

(இ - ள்) அழல் - வெயிலினது வெப்பம், மண்டு போழ்தின் - மிக்ககாலத்தில், அடைந்தவர் கட்கு எல்லாம்-(தன்னைவிரும்பி) அடைந்தவர்களுக்கெல்லாம், நிழல்மரம்போல - (வெயில் வெப்பத்தைத் தான் தாங்கிச்சமனாக) நிழலைத்தருகின்ற ஆலமரத்தைப்போல, நேர் ஒப்ப- சமனாக, தாங்கி-(தன்னையடைந்த பலர் குடும்பபாரத்தை) ஏற்றுக்கொண்டு, பல்லார் - அப்பலரும், பயன்துய்ப்ப - (தான்பெற்ற) செல்வத்தை அநுபவிக்கும்படி, பழுமரம் போல - (தன்கனிகளைப் பலபறவைகளும் தன்னிலிருந் துண்ணதிற்கும்) அவ்வாலமரம்போல, தான்வருந்தி - (முயற்சியால் வருந்துன்பத்தால்) தான் வருத்தமுற்று, வாழ்வதே - உயிர்வாழ்வதே, நல் ஆண்மகற்கு - நற்குணமுள்ள ஆண்மை யுடையானுக்கு, கடன் - கடமை. எ-று.

குளிர்ந்த கிரி நிழலைத்தருவது வேறின்மையால் நிழன் மரமென்றது ஆலமரத்தை ஆதலின் பழுமரம் சுட்டுப்பொருளதா நின்றது. பழுமரம் பழுத்தலையுடைய மரமென்பது பொருள்; இது மிகுதிபற்றி வந்த பெயர். நேரொப்ப ஒருபொருட் பன்மொழி. அதிகாரத்தால் பல்லார் உறவினருக்காயிற்று. (உ)

அடுக்கன் மலைநாட தஞ்சேர்ந் தவரை
எடுக்கல மென்னார் பெரியோர்—அடுத்தடுத்து
வன்காய் பலபல காய்ப்பினு மில்லையே
தன்காய் பொறுக்கலாக் கொம்பு.

(இ - ள்) அடுக்கல் - அடுக்கலாகிய, மலைநாட - மலையைச்சார்ந்த நாட்டானே, தஞ்சேர்ந்தவரை - தம்மைச்சார்ந்த உறவினரை, எடுக்கலம் நாம்தாங்கோம், என்னார் - என்று சொல்லிநீக்கார், பெரியோர் - மேன்மக்கள், அடுத்து அடுத்து - மிகுதியும்நெருங்கி, வல்காய் - வன்மையாகியகாய்கள், பலபலகாய்ப்பினும் - பலபலகாய்த்தாலும், தன்காய் - தன்னுடைய அக்காய்களை, பொறுக்கலாத - தாங்கமாட்டாத, கொம்புஇல்லை - கொம்புஇல்லை. எ - று.

அடுக்கன்மலை இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலை. முன்னுள்ள அடுக்கு இடைவிடாமைப்பொருளது. பின்னுள்ளது மிகுதிப்பொருளது. காயினது அடைமொழியாகிய வன்மை, பொருளில் சேர்ந்தவருடையவறுமையின் மிகுதியையுணர்த்திற்று. உவமையின் ஆற்றலால் தம்வருத்தத்தைநோக்காரென்பதாயிற்று. பெரியோர் தம்வருத்தத்தை நோக்கி உறவினரைத்தாங்காமலிரார்என்பது கருத்து. (௩)

உலகறியத் தீரக் கலப்பினு நில்லா
சிலபகலாஞ் சிற்றினத்தார் கேண்மை—நிலைதிரியா
நிற்கும் பெரியோர் நெறியடைய நின்றனைத்தால்
ஒற்கமி லாளர் தொடர்பு.

(இ - ள்) சிறுஇனத்தார் - கீழானவர், கேண்மை - (பிறரிடத்துக்கொ ள்ளும்) உறவுகள், உலகுஅறிய - தம்நாட்டிலுள்ளார் யாவரும் அறியும்படி, தீர - (அகம்புறம்) முற்றும், கலப்பினும்- கலந்துநின்றாலும், நில்லா-நிலைபெ றாதனவாகி, சிலபகல் ஆம் - சிலநாளேநிற்கும், ஒற்கம் இல் ஆளர் - (பிறரை த்தாங்குவதில்) தளர்ச்சியின்மையை ஆளுதலுடையார், தொடர்பு - (கொள் ளும்) உறவு, நிலை - தவநிலையில், திரியாமல் - வேறுபடாமல், நிற்கும் - நிற்கி ன்ற, பெரியோர் - மேலோர், நெறி - தவவொழுக்கத்தின்பயனை, அடைய - அ டையும்படி, நின்றால் அனைத்து - (அவ்வொழுக்கத்தில்) நின்றாற்போல் வது. எ - று.

பெரியார் சுற்றந்தழுவுதலின் நிலைமை இதனால் கூறப்பட்டது. அனை யதென்னும் ஒன்றன்படர்க்கைக் குறிப்புமுற்றில் அகரந் தொகுக்கப்ப ட்டமையால் தகரமிக்கது. உலகு "உத்தானபாத னருளுரோமபதனென்று ள னவ்வுலகையாள்வோன" எனபதிற்போல நாட்டுக்காயிற்று.பயனை நெறி என்றார் பின்னுண்டாவதாதலால். சிறியார் கேண்மை இழிப்பினால் பன்மை ப்பாலாயிற்று.

இன்ன ரினைய ரெமர்பிற ரென்னுஞ் சொல்
என்னு மிலரா மியல்பினால்—துன்னித்
தொலைமக்க டுன்பந்தீர்ப் பாரேயார் மாட்டும்
தலைமக்க ளாகற்பா லார்.

(இ - ள்) இன்னர் - இத்தன்மையர், இனையர் - இவ்வளவினர்,எமர்- உறவினர், பிறர் - அயலார், என்னும் சொல் - என்று சொல்லப்படுஞ்சொல், என்னும் - சிறிதும்,இலர் ஆம - இலராகிய, இயல்பினால் - தன்மையினால், துன்னி - தாம்சேர்ந்து, தொலைமக்கள் - வலியிழந்தமனிதரது, துன்பம் தீர் ப்பாரே - துன்பத்தை நீக்கவல்லவரே, யார்மாட்டும் - பகைவர் அயலாரிடத்து ம், தலைமக்கள் - மேன்மக்கள், ஆகல்பாலார் - ஆகுதலாகிய பான்மையுடை யார். எ - று.

இன்னர் நன்மை தீமைகளைப்பற்றியும், இனையர் நட்புப்பகைகளைப்பற்றி யும், எமர் குலத்தைப்பற்றியும், பிறர் இவை யொன்று மின்மை பற்றியும் நி ன்றன. என்னென்னும் ஒன்றன் படர்க்கை வினாப்பெயர் முற்றுப் பொரு ளோடு இழிவு சிறப்புப் பொருளதாகிய உம்மையைப் பெற்றமையால் சிறு

மைக்காயிற்று. சொல் சிறிது மிலனெனவே அதற்குக் காரணமாகிய கருதலு மிலரென்பதாயிற்று. பகைவர் வறுமை முதலியவற்றாலும் தொலைவுவருமாத லால் பொதுப்படத் தொலைமக்களென்றும், பகைமையையும், ஏதின்மை யையும், பாராட்டாமல் துன்பந் தீர்த்தபின் அது பற்றி அவர்களால் தலை மக்களெனக் கருதப்படுதலால் ஆகற்பாலரெனா ஆக்க வினைதந்துங் கூறினா ர். துன்னி என்னும் வினையெச்சம் தீர்ப்பாரென்னும் வினைப் பெயர்கொண் டது. ஏ பிரிநிலை. (ரு)

பொற்கலத்துப் பெய்த புலியுகிர் வான்புழுக்கல்
அக்காரம் பாலோ டமாரார்கைத் துண்டலின்
உப்பிலிப் புற்கை யுயிர்போல் கிளைஞர்மாட்
டெக்கலத் தானு மினிது.

(இ - ள்) பொன்கலத்து - பொன்னாற்செய்த பாத்திரத்தில், பெய்த - இட்ட, புலிஉகிர் - புலியினதுநகம்போலும், வால்புழுக்கல் - வெண்மையாகி யசோற்றை, அக்காரம்ஓடு — சருக்கரையோடும், பாலோடு - பாலோடும், அ மரார்கைத்து - உள்ளன்பில்லாரிடத்து, உண்டலின்- உண்ணுதலினும், உயி ர்போல் - உயிர்போன்ற, கிளைஞர்மாட்டு - உறவினரிடத்து, எக்கலத்து ஆனு ம் - எபாத்திரத்திலாயினும், உப்புஇலி - உப்பில்லாததாகிய, புற்கை- நொய் க்கஞ்சியை உண்ணல், இனிது - இனிமைதருவதாகும். எ - று.

புழுக்கல் தொழிலாகுபெயர், அமரார் எதிர் மறை வினைப்பெயர்; அமர் தல் விரும்பல். உண்டலினென்னும் ஐந்தனுருபு உறழ் பொருளில் வந்தது; உறழ் பொருள் மாறுபடக்கூறப்படுவது. கைத்து பகுதிப் பொருளதாகிய துவ்விகுதி பெற்றபெயர்; பொருள் வசம். உப்பிலி பண்படியாகப்பிறந்த ஒன் றன்படர்க்கைப்பெயர், உப்பில் பகுதி, இ ஒன்றன்படர்க்கை விகுதி.போல் வி னைத்தொகையாதலால் லகரந்திரியா தியல்பாயிற்று. ஆன் ஆயினென்பதன் மரூஉ. மானங்கெடாமையின் புற்கையுண்ண லினிதாயிற்று. (சு)

நாள்வாய்ப் பெறினுந்தந் நள்ளாதா ரில்லத்து
வேளாண்மை வெங்கருனை வேம்பாகும்—கேளாய்
அபராணப் போழ்தி னடகிடுவ ரேனும்
தமரரயார் மாட்டே யினிது.

(இ - ள்) கேளாய் - நீகேள், தம் நள்ளாதார - தம்மை (அகத்தில்) நட்புக்கொள்ளாரது, இல்லத்து - வீட்டில், வேளாண்மை - (அவரால்) ஈய ப்பட்டதாகிய, வெம் - (கண்டோர்க்கு) விருப்பத்தைத் தருகின்ற, கருனை பொரிக்கறியை,நாள்வாய்-முற்பகலில்,பெறினும்-(உண்ண)பெற்றாலும்,வேம் பு ஆகும்-(அறிவுடையார்க்கு)வேம்பின்விதைபோ லினிதாயிராது ,அபராணப்

போழ்தில்- பிற்பகலில், அடகு இடுவர் எனும்-இலைக்கறியை இடுவாராயினும், தமர் ஆயார் மாட்டே - (அகத்தில்) உறவாயினாரிடத்தே, இனிது - (அது) இனிமையுடையது. எ - று

பின்னே அபராணப்போழ்தி னென்றமையால் நாள்சிறந்த முற்பகலுக் காயிற்று. பெறுதல் இடுதல்களி னின்மையை யுணர்த்தலால் உம்மைகள்எதிர்மறைப்பொருளன; முறையே உயர்வு சிறப்பு இழிவு சிறப்பாகினும் பொருந்தும். கருனை அடகு உணவின் மேன்மை யிழிவுகளை உணர்த்தவந்த குறிப்புச் சொற்கள். ஏ பிரிநிலை. (எ)

முட்டிகை போல முனியாது வைகலும்
கொட்டியுண் பாருங் குறடுபோற் கைவிடுவர்
சுட்டுக்கோல் போல வெரியும் புகுவரே
நட்டா ரெனப்படு வார்.

(இ - ள்) முட்டிகைபோல - (இரும்பைத்தாக்குகின்ற) சுத்திபோல, வைகலும்- சேர்ந்திருக்கும் நாளெல்லாம், முனியாது - அன்புகாட்டி, கொட்டி- (இன்னது வேண்டுமென) வருத்தி, உண்பாரும் - (வாங்கி) உண்ணும் இயல்பினரும், குறடுபோல - குறட்டைப்போல, கைவிடுவர் - (தீங்கு நேரிட்டவிடத்து) விட்டு நீங்குவர், நட்டார் எனப்படுவார் - நட்பினரென்றுசொல்லப்படுபவர், சுட்டுக் கோல்போல - உலையாணிபோல, எரியும் புகுவர்- (தம்மால் நட்புச்செய்யப்பட்டார் தீப்புகுவாராயின் தாமும் அவரோடு) தீயினும் புகுவார். எ - று.

முன்னுள்ளபோல என்னுஞ் செயவெனெச்சம் கொட்டி என்னும் வினைகொண்டது. உவமைகள் தொழிலுவமைகள். குறடுபோலுதலாவது அது இரும்பைப்பற்றி நின்று, அவ்விரும்பு தீயையடைந்தபோது விட்டு நீங்குதல்போல, கூடாநட்பினர் துன்பம வருமுன்னெல்லாம் ஒருவரைப்பற்றி நின்று, அவர் ஒருதுன்பத்தை யடைந்தபோது விட்டு நீங்குதல். சுட்டுக்கோல் கொல்லன் தீயினில் வைத்தபொருள் பதமானதையும் ஆகாததையும் அவனுணர்தற்கு மேலுள்ள கிட்டம், கரிமுதலியவற்றை நீக்கிக்காட்டுதற்குரியகோல், இது இரண்டாம் வேற்றுமைத்தொகை, சுட்டுதலையுடைய கோலெனவிரியும்; சுட்டு முதனிலைத்தொழிற்பெயர். உண்ணுதலின் சிறப்பைக் குறித்தலால் உண்பாருமென்னும் உம்மை உயர்வுசிறப்பு. எரியுமென்னும் உம்மைநட்பினர் வறுமைத்துன்பமடைந்தபோது அத்துன்பத்தை அடைந்ததுமன்றி எனப்பொருள்தரலால் இறந்தது தழீஇய எச்சவும்மை. (அ)

நறுமலர்த் தண்கோதாய் நட்டார்க்கு நட்டார்
மறுமையுஞ் செய்வதொன் றுண்டோ—இறுமளவும்

இன்புறுவ தின்புற் றெழீஇ யவரோடு
துன்புறுவ துன்புறாக் கால்.

(இ - ள்.) நறுமலர்-நன்மணமமைந்தமலர்களாற் றொடுக்கப்பட்ட, தண் கோதாய் - குளிர்ச்சியாகியமாலையையணிந்தவளே, நட்டார் - உறவினரொரு வர், இறும்அளவும் - (தாம்) உயிர்முடியுமளவும், அவரோடு எழீஇ - (தம்மா ல்) உறவுசெய்யப்பட்டவரோடு பிரியாதிருந்து, இன்புஉறுவது-இன்பமடை யுங்காரியத்தில், இன்புஉற்று - (ஒக்கத்தாமும்) இன்பத்தைஅடைந்து, துன் புஉறுவ - துன்பமடையுங்காரியங்களில், துன்புஉறாக்கால் - துன்பத்தை அ டையாவிடின், நட்டார்க்கு - அவ்வுறவினர்க்கு, மறுமையும் - மறுமையிலு ம், செய்வதுஒன்று - செய்வதாகிய ஒருநன்மை, உண்டோ-உளதோஇல்லை. எ - று.

மறுமையு மென்ற வும்மை இறந்தது இழீஇய எச்சவும்மை.மற்றது மு ற்றும்மை. மறுமையிற் செய்வதாகிய ஒருநன்மையாவது தம்நட்டார் தீய வழியிற் செல்லத்தொடங்கிய போது செல்லவொட்டாமல் மறுத்து நல்லவ ழியிற்செல்லும்படிச் செய்தல். இது வன்றி மனங்கலந்து செய்த நட்புக்கார ணமாக வுண்டாகிய அன்பு மறுமையிலுந்தொடர்ந்து அவரிடத்து அன்புடை யாராதலெனினுமாம். நாட்டாரோடு இன்புறுதல் சிறிதும் துன்புறுதல்பெரி துமென்பார் இன்புறுவது துன்புறுவவென்றார். உறுவது, உறுவவினைப்பெ யர்கள்.

விருப்பிலா ரில்லத்து வேறிருந் துண்ணும்
வெருக்குக்கண் வெங்கருனை வேம்பாம்—விருப்புடைத்
தன்போல்வா ரில்லுட் டயங்குநீர்த் தண்புற்கை
என்போ டியைந்த வமிழ்து,

(இ-ள்.) விருப்புஇல்லார் - (தன்னிடத்து) விருப்பமில்லாத பெருஞ்செல் வத்தினரது, இல்லத்து - வீட்டில், வேறுஇருந்து - (அவரோடன்றி) வேறி டத்திருந்து, உண்ணும் - உண்ணுகின்ற, வெருகு - பூனையினது, கண் - க ண்போலும்நிறமுள்ள, வெம்கருனை - விருப்பத்தை உண்டாக்கும்பொரியல், வேம்புஆம்-(அறிவுடையோர்க்கு) வேம்பின்விதை போலக்கைப் புள்ளதாகு ம், விருப்புஉடைய - (தன்னிடத்து) விருப்பமுடைய, தன்போல்வார் - தன் னைப்போலும் வறியாருடைய, இல்லுள் - வீட்டில், நீர்தயங்கு - நீர்மிகுதியும் விளங்குகின்ற, புற்கை - நொய்க்கஞ்சி, என்போடு - உடலோடு, இயைந்த-இ சைந்துநின்ற, அமிழ்து - தேவருணவுபோல்வது. எ - று.

தல்விகுதி புணர்ந்து கெட்டமாத்திரையில் விரும்பென்னும் முதனிலை திரிந்ததாதலால் விருப்பு முதனிலைதிரிந்த தொழிற்பெயர். கண் உருவுவமை.

இங்கும் கருணைஉணவின்மேன்மையைஉணர்த்திநின்றது. வேறிருந்தென்றத னாலும், பின் தன்போல்வாறென்றதனாலும் விருப்பிலார் மிக்க செல்வத்தினரு க்காயிற்று. தோல்முதலிய எழுவகைத்தாதுக்களும் இயைந்தபிண்டம் உட லாதலால் என்பு சினையாகுபெயர். அமிழ்து உண்ணப்படின் சேரணிக்காமல் உண்டவருடலோடு இசைந்து நின்று பசிதாக முதலியவற்றை நீக்கி நிற்ப தாதலால் என்போடியைந்த அமிழ்தென்றார். (ம)

## உஉ - ஆம். அதிகாரம் நட்பாராய்தல்.

---

அஃதாவது இருவகை நட்பினையும் ஆராய்ந்து அறிதலையுணர்த்துவ து. அவரை ஆராய்ந்தறிந்தே நட்புக்கொள்ளவேண்டுதலால் இது சுற்றந்த ழாலின் பின்வைக்கப்பட்டது.

கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மையெஞ் ஞான்றும்
குருத்திற் கரும்புதின் றற்றே—குருத்திற்
கெதிர்செலத்தின் றன்ன தகைத்தரோ வென்றும்
மதுரமி லாளர் தொடர்பு.

(இ-ள்.) கருத்து (ஒவ்வொருசெய்யுளின்) கருத்துரையை, உணர்ந்து-மு ன்அறிந்து, கற்று - (பலநூல்களையும்) கற்று, அறிந்தார் - தெளிந்தவரோடு செய்யும், கேண்மை - நட்பு, எஞ்ஞான்றும் - செல்வஞ்சுருங்கிய காலத்தும், குருத்தின் - குருத்தினின்று, கரும்பு - கரும்பினை, தின்றல் அற்றே-தின்றற் போலும் தன்மையுடையதே, மதுரம் இல் ஆளர் - இனிமைக்குணம் இல்லா மையை ஆளுதலுடையாரோடு செய்யும், தொடர்பு - நட்பு, என்றும் - செ ல்வம்பெருகியகாலத்தும், குருத்திற்கு - குருத்தினுக்கு, எதிர்செல - எதிர்செல் லும்படி, தின்றல்அன்ன-தின்றலையொத்த, தகைத்து-தன்மையுடையது. எ-று.

கற்றறிந்தார் தமது நட்புவேண்டிவந்தவரது நற்குண நற்செய்கைகளை முன்னறியாமை காரணமாகப் பொதுவான அன்புடைமைபற்றிக் குருத்தி னென்றும், அக்குணச்செய்கைகளை அறியுந்தோறும் அவரிடத்து அன்புபெ ருகிவருதலான் குருத்திற்றின்றற்றென்றும், மதுரமிலாளர் தம்மை நட்டோர் க்கு முதலிற்காட்டிய அன்பு பின்சுருங்குதலியல்பாதலால் குருத்திற் கெதிர் செலத்தின்றன்ன தகைத்தென்றுங்கூறினார். ஆதலால் ஆராய்ந்து கற்றுணர் ந்தார் கேண்மையைக்கொள்க என்பது கருத்து. ஏதேற்றம். ஐந்தனுருபுஎல் லைப்பொருளது. நான்கனுருபும் அப்பொருளில்வந்தது. அரோ அசை. (க)

இற்பிறப் பெண்ணி யிடைதிரியா ரென்பதோர்
நற்புடைக் கொண்டமை யல்லது—பொற்கேழ்

